# நந்தவனம்



வி. ஸ. காண்டேகர்



கா. ஸ்ரீ. ஸ்ரீ.
மொழிபெயர்ப்பு



அல்லயன்ஸ் கம்பெனி
தபால் பெட்டி நெ. 617
மயிலாப்பூர் :: சென்னை-4

# வெயிலும் நிலவும்

**பு**திய ஊருக்கு வந்ததும் நான் எடுத்துக் கொண்ட முதல் வழக்கு அதுதான். ஆகவே தீர்ப்பு முழுவதையும் எழுதிவிட்டுத்தான் தூங்குவது என்ற தீர்மானத்தோடு உட்கார்ந்தேன். ஆனால் அந்த வழக்கிலே சம்பந்தப்பட்ட இளம் விதவை தன் குழந்தையை நள்ளிரவிலே மென்னியை அழுத்திக் கொன்றதற்கு அத்தாட்சிகளைப் படித்ததும்—

கட்டிலில் அமைதியாகத் தூங்கிய எங்கள் சுந்தரத்தை நான் பார்த்தேன். அம்மாவின் மடியில் முகத்தை அழுத்திக்கொண்டு தூங்கிய அந்தக் குழந்தையைக் கண்டதும் என் உடல் நடுங்கியது. இந்தக் குழந்தைக்காக அவள் எவ்வளவு விரதம் இருந்தாள்! வாடிப்போன பயிரைப் பார்த்ததும் குடியானவனுடைய நெஞ்சம் இடிகிறது. சுந்தரம் பிறப்பதற்கு முன்பு அவளுடைய சோர்ந்த முகத்தைக் கண்டு நான் அப்படித்தான் வருந்தினேன். ஆனால் தெய்வம் எங்கள் பயிரை வாடவிடவில்லை. மப்பு மந்தாரம் இல்லாமலே மழை பொழிவதுபோல எங்கள் குடும்பத்திலே சுந்தரம் பிறந்தான்.

நான் எவ்வளவோ தைரியம் உள்ளவன்தான். முதல் தேதியன்று நூற்றுக்கணக்காகச் சம்பளம் வாங்குகிறவன். நீதிபதியின் ஆசனத்தில் உட்கார்ந்ததும் உணர்ச்சிக் கதவுகளையெல்லாம் மூடிவிட்டு அவற்றைச் சிந்தனைப் பூட்டுக்களால் பூட்டுகிறவன். இவ்வளவெல்லாம் இருந்துங்கூட, இந்தக் குழந்தை பிறப்பதற்கு முன்பு எங்கள் வீடு வெறிச்சென்று தான் இருந்தது. நாங்கள் வாழும் பங்களா எப்போதுமே பிரம்மாண்டமாக இருக்கும் — வானத்தைப் போல. பல அழகிய பொருள்கள் அதற்கு அழகு செய்யும்; வானத்தைத் தாரகைகள் அழகு செய்வதில்லையா, அதுபோல! ஆயினும் அந்த வீட்டிலே இருள் நிரம்பியிருப்பதாக எனக்குத் தோன்றும். வெண்மதி போன்ற இந்தக் குழந்தை மட்டும் பிறக்காமல் இருந்திருந்தால்—?

விளக்கைச் சுற்றி வட்டமிடும் விட்டிற் பூச்சிகளைப் போல, பல நினைவுகள் தொடர்ந்து வந்தன. அந்த விதவையின் செய்கை எனக்கு விந்தையாகத் தான் இருந்தது. தன் வயிற்றை நிரப்ப அல்லும் பகலும் உழைக்கும் வேலைக்காரி அவள். இந்தக் குழந்தையைக் காப்பாற்றத்தானா அவளால் முடியாது? நள்ளிரவிலே தன் சொந்தக் குழந்தையை — பத்து மாதம் சுமந்து பெற்ற குழந்தையை— ஒரு தாய் கொல்லவும் முடியுமா? என்னால் அதை நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. ஆனால் அந்தப் பதினெட்டு வயதுப் பெண் தன் குழந்தையின் நெஞ்சுக் குழியை அழுத்தி, அந்தக் கொலைபாதகத்தைச் செய்திருந்தாள்.

உள்ளே வேர்வையாக இருந்ததனால் ஜில்

லென்று காற்று வீசும் வெளிமாடிக்கு வந்தேன். எங்கும் காரிருள் பரவியிருந்தது. அன்று காலையில் தர்ப்பணத்துக்காகப் புரோகிதர் வந்து போனமை யால் திதி எனக்கு ஞாபகம் வந்தது.

அமாவாசை நள்ளிரவு! பேய் பிசாசுகள் திரு விழாக் கொண்டாடும் நேரம் அது. நள்ளிரவிலே தன் குழந்தையைக் கொன்றும் நிரபராதியாகத் தோன்றும் அந்த இளம்பெண் என் கண்முன்னல் நின்ருள். 'மனிதர்களின் மனத்திலுள்ள பேய்பிசாசு களும் இருட்டிலேதான் வெளிப்படுகின்றன. இயற் கைதான் மனிதனைக் குற்றவாளியாக்கி இருக்கிறது. உலகில் இருட்டு மட்டும் இல்லாதிருந்தால்—?' என்று நான் நினைக்கலானேன்.

நான் தற்செயலாக வானத்தைப் பார்த்தேன். தாரகைகள் கண்ணைச் சிமிட்டியபடி, 'இருட்டு இல் லாமலிருந்தால் எங்களைப் போன்ற அழகிய நட்சத் திரங்களை நீ பார்க்க முடியுமா?' என்று என்னைக் கேட்டன.

அந்தக் குழந்தையின் கழுத்தை நெறித்த இளம் விதவையின் உருவம் மறுபடியும் எனக்குத் தென்பட்டது. 'இந்த நட்சத்திரங்களும் வேண்டாம்; இவற்றின் அழகை வெளிப்படுத்தி மனிதர்களைப் பாவம் செய்யத் தூண்டும் இருட்டும் வேண்டாம்!' என்றுதான் எனக்குத் தோன்றிற்று.

"இன்னுமா விழித்துக்கொண்டிருக்கிறீர்கள்?" என்று தூக்கத்திலிருந்து விழித்த என் மனைவி கேட்டாள்.

"கோர்ட்டு வேலைதான் நடக்கிறது!"

"விடிகாலையில் எழுந்திருக்க வேண்டுமே!"

நான் அந்த விஷயத்தை மறந்தே போய்விட்டேன். குற்றவாளிகளைச் சீர்திருத்துவதிலே முனைந்திருந்த ஒருவர் மறுநாள் காலையில் என்னை அழைத்துப் போவதாக இருந்தார். அவர் சுமார் முந்நூறு பேர்களை அப்படிச் சீர்திருத்தி இருந்தார். நான் விளக்கை அணைப்பதற்காக மேஜையின் அருகில் சென்றேன். உடனே இருட்டைப் பற்றிய எண்ணம் வந்தது. எதனாலோ, நான் விளக்கைத் தாழ்த்தி வைத்தேன்.

"இன்று விளக்கை அணைக்கப் போவதில்லையா?" என்று என் மனைவி கேட்டாள். விளக்கு வெளிச்சத்தில் அவள் கண்கள் கூசின.

நெஞ்சில் இருந்த வருத்தத்தை நீக்குவதற்காக, "இன்று அமாவாசை அல்லவா?" என்று நான் வேடிக்கையாகப் பேசினேன்.

"அப்படியானால் என்ன?"

"வானத்திலே இன்று வெண்மதி இல்லை. அதைப் பார்க்காமல் நட்சத்திரங்களுக்கு மகிழ்ச்சி உண்டாகாது." அவள் ஆச்சரியத்தோடு என்னைப் பார்த்தாள்.

"வெண்மதியைத் தேடிக்கொண்டு அவை இங்கே வரும். அவற்றுக்கு இந்த வெண்மதி தென்படவேண்டும் என்றுதான் விளக்கை வைத்திருக்கிறேன்!" என்றேன்.

"இச்!'

* * *

மறுநாள் காலையில் அந்தச் சீர்திருத்தக்காரரோடு நான் புறப்பட்டபோது, குழந்தையும் என்னோடு வருவதற்குப் பிடிவாதம் பிடித்தான்

அவனைப் பயப்படுத்துவதற்காக, "அங்கே பூச் சாண்டி இருக்கிறது!" என்றேன்.

"இன்னும் என்ன இருக்கிறது?"

"அங்கே ஒரே இருட்டாக இருக்கும்!"

"இருக்கட்டுமே."

இருட்டு என்ற கடைசி அஸ்திரமும் அவனிடத்தில் பயன்படாததனால் அவனையும் அழைத்துக் கொண்டு போக வேண்டியதாயிற்று.

சுமார் இருநூறு குறவர்கள் வாழும் கிராமம் அது. அவர்களுடைய சுத்தமான குடிசைகளையும் கச்சிதமான உடைகளையும், நாகரிக நடவடிக்கையையும் கண்டு அந்தச் சீர்திருத்தக்காரரிடம் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டாயிற்று. கோடியில் ஒரே ஒரு குடிசைதான் பார்க்க வேண்டியது பாக்கி இருந்தது. அங்கிருந்த எல்லாரையுங்காட்டிலும் சீர்திருந்தியவன் அந்தக் குடிசையில் இருப்பவன்தானும். பத்து வயதுப் பையனுக இருந்த போது, சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பு அவன் இங்கே வந்தானும். அவன் எப்போதும் திருடினதே இல்லையாம். அவனுடைய குடிசையை நோக்கிப் போனபோது, "பெரும்பாலான குற்றங்கள் இரவில்தானே நடக்கின்றன?" என்று நான் அந்தச் சீர்திருத்தக்காரரைக் கேட்டேன்.

"ஆமாம்."

"அப்படியானல் இருட்டுத்தான் குற்றவாளிகளுக்குத் துணையாக இருக்கிறது. இயற்கைதான் பாவத்துக்கு உதவி செய்கிறது. அப்படியானல்—"

"இயற்கையிலே உண்டாகும் இருள் கிடக்கட்டும். சமூகத்திலுள்ள இருளைப்பற்றி என்ன சொல்

கிறீர்கள்? அங்கே பகலிலேயே காரிருள் சூழ்ந்து கிடக்கிறதே!"

சமூகத்திலுள்ள இருள்! பகலிலே படர்ந்த காரிருள்! தன் குழந்தையைக் கொன்ற அந்த இளம் விதவையும், வயிற்றுக்காகத் திருடுகிறவர்களும், இன்னும் எத்தனையோ வழக்குகளில் வந்த குற்ற வாளிகளும் என் கண்முன்னல் தோன்றினர்கள்.

அந்தச் சீர்திருத்தக்காரர் குடிசைக்குவெளியே நின்று, "அர்ச்சுன!" என்று கூப்பிட்டார்.

"இதோ வந்தேன்" என்று சொல்லிக் கொண்டே கட்டுமஸ்தான ஓர் இளைஞன் வெளியே வந்தான்.

"என்ன நடக்கிறது?"

"வீட்டுக்காரி பால் கறக்கிருள். இப்பொழுது தான் கன்றை விட்டிருக்கிறேன்."

"நாங்கள் சரியான நேரத்தில்தான் வந்திருக்கி ரோம். எங்களுக்கும் பால் கொடுப்பாய் அல்லவா?"

அர்ச்சுனனுடைய கண்களில் மகிழ்ச்சி தாண் டவமாடியது. நாங்கள் குடிசைக்குப் பின்னல் போனேம். தாயைக் கண்டதும் சிறு குழந்தையின் முகத்தில் மகிழ்ச்சி பொங்குவதுபோல, பால் நிரம் பிய பாத்திரத்திலே நுரை பொங்கியது. அர்ச்சுன னுடைய மனைவி அதை எடுத்துக்கொண்டு உள்ளே போனுள். கன்றுக்குட்டி பாலைக் குடித்துக் கொண்டே, பசுவை விளையாட்டாக முட்டியது.

தூய்மையான கிண்ணத்தில், அப்பொழுதுதான் கறந்த உஷ்ணமான பாலை அவர்கள் எங்களுக்குக் குடிக்கக் கொடுத்தபொழுது, இன்பமாக வாழும் அந்தத் தம்பதிகளின் நிழலையே அதில் கண்டேன்.

அர்ச்சுனனுடைய மனைவி சுந்தரத்தின் கையிலும் ஒரு சிறு கிண்ணம் நிறையப் பாலைக் கொடுத்தாள். அப்பொழுது நான் அவளை உற்றுப் பார்த்தேன். அவள் கண்ணில் நீர் துளும்பியதாக எனக்குத் தோன்றிற்று. சிறு குழந்தை வானத்து வெண் மதியை ஆவலோடு பார்ப்பதுபோல, அவள் என் குழந்தையைப் பார்த்தாள். நான் இவ்வளவு நாகரிக முடையவனுக இருந்தும் குழந்தைக்குத் திருஷ்டி படுமோ என்ற எண்ணம் தோன்றியது. குழந்தை யிடமிருந்து அவள் கிண்ணத்தைத் திரும்பி வாங்கிக் கொண்டபொழுது அவள் கழுத்தில் இருந்த பொற்சங்கிலியை நான் பார்த்தேன். கள் ளங்கவடு இல்லாமல் ஓயாமல் உழைக்கும் இந்தத் தம்பதிகள் எவ்வளவு சிக்கனமாக இருந்து இந்தப் பொன் நகையைச் செய்திருப்பார்கள்? இந்தச் சங்கிலி அவர்களுக்கு நவரத்தினம் போலத்தானே இருக்கும்!

அந்தச் சீர்திருத்தக்காரரிடம் நான் விடை பெற்றுக் கொண்டபோது, "அர்ச்சுனனுடைய மனைவியின் கழுத்தில் பொற் சங்கிலி மின்னு கிறதே!" என்று சொன்னேன்.

"நெற்றிவேர்வை நிலத்தில் விழ அவர்கள் இருவரும் தம்பிடி தம்பிடியாகச் சேர்த்து இந்தச் சங்கிலியை வாங்கினுர்கள். பொன் என்ருல் இந்த இனத்தாருக்கு மிகவும் ஆசை."

"தம்பதிகள் மிகவும் சுகமாகத்தான் வாழ்கிருர் கள்."

"ஆனல் ஒரு குறை!"

"அவர்களுக்குக் குழந்தை இல்லையா என்ன?

பின்னே சுந்தரத்துக்கு ஒரு சின்னக் கிண்ணம் கொடுத்தாளே!"

"தனக்குக் குழந்தை பிறக்கும் என்பதற்காக அவள் முன்னதாகவே அதை வாங்கி வைத்திருக்கிருள்."

எங்கே பார்த்தாலும் மனித இயல்பு ஒன்ருகத்தான் இருக்கிறது என்பதை உணர்ந்தேன். சுந்தரத்தின் தாய், குழந்தைக்காக இப்படித்தானே ஏங்கினுள்!

அப்படியானல் அந்த இளம் விதவை தன் குழந்தையை ஏன் கொன்ருள்? இயற்கையான காரிருள் அவளுக்கு உதவி செய்திருக்கலாம். ஆனல் உண்மையான இருள் — நியாய தேவதையின் உள்ளம் கல்லால் ஆனது. அத்தாட்சி இருக்கிறதா என்று பார்த்து அது உடனே தீர்ப்புச் சொல்லிவிடும்!

* * *

அன்று ஞாயிற்றுக்கிழமை. சாப்பிட்டு வெற்றிலைபாக்குப் போட்டுக்கொண்டு, ஜன்னலின் அருகில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து நான் டால்ஸ்டாயின் 'புனர்ஜன்மம்' என்ற நாவலைப் படிக்க எண்ணியிருந்தேன். ஜன்னலுக்கு வெளியே இருந்த தொட்டியில் இரண்டு மூன்று ரோஜா மலர்கள் பூத்திருந்தன. அவற்றின் நறுமணம் இடையிடையே காற்றலையோடு வீசியது. ஒரு மலரைப் பறிக்க வேண்டும் என்ற ஆவலோடு நான் எழுந்தேன். மலர் கிடைப்பது இருக்கட்டும், என் கையில் இரண்டு மூன்று முட்கள் பொத்திவிட்டன.

ரோஜா — மணம் — முள்!
மனிதன் — புண்ணியம் — பாவம்!

எனக்குத் திடீரென்று தோன்றிய இந்த விந்தையான கற்பனைதான் அந்த நாவலிலும் இருந்தது.

கீழே ஏதோ கலவரம் கேட்டது. நான் ஜன்னலிலிருந்து எட்டிப் பார்த்தேன். புழைக்கடையில் எங்கள் வேலைக்காரி, அர்ச்சுனனிடமிருந்தும் அவன் மனைவியினிடமிருந்தும் ஒரு பழம் பானையை விலை பேசிக்கொண்டிருந்தாள். பழம் பானையாக இருந்தாலும் அதை வாங்குவது என்பது ஏழைகளுக்கு ஒரு பெரிய திருவிழாவைப் போல! அவர்கள் பேசிக்கொண்டிருந்த பொழுது அங்கே சுந்தரம் வந்தான். அர்ச்சுனனின் மனைவி அவனைக் கண்டதும் தன் பேரத்தைக்கூட மறந்துவிட்டதை நான் பார்த்தேன். அவள் மிகவும் ஆசையோடு அவனைக் கூப்பிட்டாள். ஆனால் அவன் வேலைக்காரியிடமே தாவிச் சென்றான்.

பேரம் முடிந்து பானையை விற்றுவிட்டு அந்தத் தம்பதிகள் பங்களாவை விட்டு வெளியே போனார்கள். தெருக்கோடியில் அவர்கள் திரும்பியபோது அர்ச்சுனனின் மனைவி சடக்கென்று உட்கார்ந்தாள். கடும் வெயிலிலே ஊர் சுற்றுவதனால் அவளுக்கு மயக்கம் வந்திருக்கும் என்று தோன்றிற்று. வேலைக்காரனை அனுப்பி விசாரிப்பதைவிட, நாமே போனால் அர்ச்சுனனுக்கு ஆறுதலாக இருக்கும் என்று நினைத்தேன். நான் கீழே இறங்கிப் பங்களாவின் சுவர் அருகே போனபோது அவர்கள் பேசியது என் காதில் விழுந்தது. அவன் மனைவி விக்கி விக்கி அழுதாள். அவன் அவளைச் சமாதானப் படுத்தினான்.

"இப்படி ஒரு பங்களாவே வேண்டுமென்று நீ நாளைக்கு அழுவாய்!"

"பங்களாவும் குழந்தையும் ஒன்றுதானா?"

"இரண்டையும் கொடுப்பவன் ஆண்டவன் தானே?"

"யார் இல்லை என்கிறார்கள்? ஆனால் ஆண்டவன் நம்மேல் கோபித்துக்கொண்டிருக்கிறானே!"

அர்ச்சுனன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவன் மனைவி கோபத்தோடு, "நீங்கள் சாதித் தொழிலை விட்டுவிட்டீர்கள். சாதி ஒழுக்கத்திலிருந்து தவறிவிட்டீர்கள். ஆண்டவன் எப்படி உங்களுக்குக் குழந்தையைக் கொடுப்பான்?" என்றாள்.

கொலைக் குற்றம் செய்தவனைப் போல அர்ச்சுனன் பேசாமல் நின்று அவளுடைய சொல்லைப் பொறுத்துக்கொண்டான்.

என் காதில் எல்லாம் விழுந்தும், இப்பொழுது நாம் பேசாமலிருப்பது நல்லது என்று தோன்றிற்று.

"வாயேன், எழுந்து வீட்டுக்குப் போகலாம்" என்று தழுதழுக்கும் குரலிலே அர்ச்சுனன் சொன்னான்.

"எனக்குக் கண்ணை இருட்டிக்கொண்டு வருகிறது!" குழந்தை இல்லை என்பதனால் ஏக்க இருள்! இயற்கையில் உண்டான இருள்!

நான்கு நாட்கள் கழித்து ஒரு திருட்டுக் குற்றத்துக்காகப் போலீஸார் அர்ச்சுனனை என்முன்னால் கொண்டு வந்து நிறுத்தினார்கள். அவன் யாரோ ஒருவர் வீட்டுக்குப் பாத்திரம் துலக்கப் போயிருந்தான். அன்று பகலில் அவன் அங்கே ஒரு குடை

யைத் திருடினன். போலீஸார் திருட்டுச் சொத்தோடு திருடனையும் பிடித்தார்கள். அவன் குடையை ஏன் திருடினன் என்று எனக்கு விளங்கவில்லை. அவன் மனைவியோ எப்பொழுதும் வீட்டு வேலை செய்பவள். இவனுக்குக் கூலிவேலைக்கே நேரம் போதாது. அப்படியிருக்க அவர்கள் எந்தக் கையினல் குடை பிடித்துக் கொள்ளுவார்கள்?

கோர்ட்டில் என் முன்னல் வந்து நின்றதும் அவன் தலையைக் குனிந்துகொண்டான். சாதாரணக் கேள்விகளும்-பதில்களும் நிகழ்ந்தன. தான் திருடியதாக அவனே ஒப்புக் கொண்டான். வக்கீலோ சாட்சியோ தேவையே இருக்கவில்லை. அவனுக்குத் தண்டனை விதிக்கும் வேலைதான் பாக்கி இருந்தது. வாழ்வில் ஒரு நாளும் திருடாதவன்-தான் கடுமையாக உழைத்து மனைவிக்குப் பொற் சங்கிலி வாங்கிக் கொடுத்தவன் - அப்படிப்பட்ட இந்த அர்ச்சுனன் ஏன் திருடவேண்டும்?

"நீ திருடியது இதுதானே முதல் தடவை?" என்று கேட்டேன்.

"ஆமாம்."

"குடை வாங்க உன்னிடம் பணம் இல்லையா?"

"என் மனைவிக்கு நான் இருபது சவரன் சங்கிலி செய்து போட்டிருக்கிறேன்!" என்று அவன் கூறினன்.

"திருடுவது நல்லதா?"

"கெட்டதுதான், ஐயா!"

"அப்படியானல் நீ என் குடையைத் திருடினய்?"

அவன் முகம் ஒரு கணம் சிவந்தது. நான் அவனுக்கு ஆறுதல் சொல்லியும் அவனல் பேச முடிய

வில்லை. கடைசியில் அவன் மெதுவாக, "ஐயா! எங்களுக்குக் குழந்தை இல்லை!" என்ருன்.

"அதனுல் என்ன?"

"எங்கள் சாதியில் ஒரு கொள்கை உண்டு."

"அது என்ன?"

"திருடாதவனுடைய வம்சம் வளராது என்பார்கள். அதனுல்தான் ஐயா—"

பிறந்த குழந்தையைக் கொன்ற அந்த இளம் விதவை! குழந்தை பிறக்க வேண்டுமென்று திருட்டுத் தொழில் செய்த இந்த அர்ச்சுனன்!

அர்ச்சுனனுடைய வழக்குக்கு என்ன தீர்ப்புச் சொல்வது? வெளியே கடும் வெயில் வீசியது.

என் மனத்து இருளிலே மட்டும் ஒரு நட்சத்திரங்கூடப் பளிச்சிடவில்லை!

# பாழடைந்த ஊர்

**அந்த** வருஷம் எங்கும் மழையே இல்லை.

ஊர்மக்கள் அனைவரும் கோயிலில் குழுமினார்கள். குழந்தைகள் கிழவர்கள், ஆண்கள் பெண்கள், ஏழைகள் பணக்காரர்கள் எல்லாருமாகக் கைகூப்பி ஆண்டவனைத் தொழுதார்கள். "தெய்வமே, எங்களுக்கு அருள் செய்வாய். நாங்கள் யாவரும் உன் குழந்தைகள்!" என்று பிரார்த்தனை செய்தார்கள்.

பிரார்த்தனை முடியும் தறுவாயில், அந்தக் கூட்டத்திலிருந்து ஒரு நாஸ்திகன் முன்வந்தான். கடலைப் போன்ற கம்பீரமான குரலில் அவன் கர்ஜித்தான்: "முட்டாள்களே, இந்தக் கல் தெய்வத்தைப் பாடிப்பாடி ஏன் வீணுகத் தொண்டையை வற்ற அடித்துக்கொள்கிறீர்கள்? மலர்களைத் தூவுவதனுல் கல்லுக்குத் தெய்வக் களை வரும். ஆனல் தெய்வத் தன்மை வந்துவிடாது. உங்களுடைய குழந்தைகள் ஒரு வாய்க் கஞ்சிக்கு வழி இல்லாமல் பட்டினியாகச் சாக வேண்டும் என்பது உங்கள் விருப்பமில்லையே? அப்படியானல் என் பேச்சைக் கேளுங்கள். அலங்காரம் செய்த இந்தக் கல்லை வேண்டிக்கொள்ளும் தொழிலை விட்டொழியுங்கள். இதே நிமிஷத்தில் எல்லாரும் என் பின்னல் வாருங்கள். நான் உங்களுக்கு ஒரு பெரிய ஆற்றைக் காண்பிக்கிறேன். நீங்கள் எல்லாரும் இரவும் பகலும் உழைத்தால் அந்த ஆற்றுநீர் நம் வயலில் வந்து பாயும். உண்மையான தெய்வம் எதிரே இருக்கும் கல்லிலே இல்லை; அது உங்கள் தோள் வலிமையிலே...."

எங்கிருந்தோ ஒரு கூரிய கல் விர்ரென்று வந்து, பிரசங்கியினுடைய மண்டையில் புதைந்தது. அந்த நாஸ்திகன் ஆவேசம் பொங்க, "சகோதரர்களே, இன்னமும் என் பேச்சைக் கேளுங்கள். பிரார்த்தனையை நிறுத்துங்கள். கல்லிலே கண்ணீரை வருவிக்கும் இந்தப் பைத்தியக்கார முயற்சியை விட்டு...." என்றான்.

அதற்குமேல் அவனால் ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை. நான்கு பக்கங்களிலிருந்தும் கல் மழை பொழிந்தது. விஷப்பாம்பை அடிப்பது போல, மக்கள் அவனை அடித்துக் கொன்றுவிட்டார்கள்.

வானத்திலிருந்து துளிமழையாவது விழவில்லை. ஏழைகளின் வீட்டிலே அடுப்புகள் தூங்கின. குழந்தைகளின் முகத்தைப் பெற்றோர்களால் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. நாள்தோறும் வீட்டிலும் வாசலிலும் அக்கம் பக்கத்திலும் சாவின் கருநிழல் அந்த மக்களைத் தொடர்ந்தது.

ஊர் மக்கள் யாவரும் மறுபடியும் கோயிலில் குழுமினார்கள். குழந்தைகள், கிழவர்கள், ஆண்கள் பெண்கள், ஏழைகள் பணக்காரர்கள் எல்லாருமாகக் கைகூப்பி ஆண்டவனைத் தொழுதார்கள். "தெய்வமே, உன் அன்பு முகில் இந்தப் பக்கமாகப் பொழிய வேண்டும். நாங்கள் எல்லாரும் உன் குழந்தைகள்" என்று பிரார்த்தனை செய்தார்கள்.

பிரார்த்தனை முடியும் தறுவாயில், அந்தக் கூட்டத்திலிருந்து ஓர் ஆஸ்திகன் முன்வந்தான். ஆற்று வெள்ளம் போன்ற குளிர்ச்சியான குரலில் அவன் பேசினான். "சகோதரர்களே, இங்கே ஏதுக்கு வீணாக

இப்படிப் பிரார்த்தனை செய்கிறீர்கள்? நாம் எல்லாரும் ஒரே ஆண்டவனின் குழந்தைகள் - ஒரே தாயின் மக்கள் - ஒரே குடும்பத்தில் வாழ்கிறவர்கள் என்பது உண்மைதானே?"

ஆம் என்று எல்லாரும் தலையை ஆட்டினார்கள்.

ஆஸ்திகன் மேலும் பேசினான்: "அப்படியானால் என்னோடு புறப்படுங்கள்! ஊரிலுள்ள தானியம் முழுவதையும் நாம் ஒன்று திரட்டுவோம். களஞ்சியங்களிலும், வீட்டுக் குதிர்களிலும், சுரங்கங்களிலும் பதுக்கி வைத்துள்ள தானியத்தை - ஒவ்வொரு மணி அரிசியையும் நாம் தேடிக் கண்டுபிடிப்போம். இப்படி நாம் திரட்டும் தானியத்திலிருந்து, ஒவ்வொருவனுக்கும் வயிற்றுக்குப் போதுமான அளவு உணவு மட்டும் தருவோம். இப்படி நாம் செய்தால் இந்த ஊரில் நாய்கள் கூடப் பட்டினியால் சாக மாட்டா. ஆனால் இப்படிச் செய்யாவிட்டாலோ, கோயிலுக்கு வெளியே விழுந்துகிடக்கும் கற்குவியலைப் போல, இந்த ஊரில் அங்கங்கே பிணக் குவியல்கள் புலப்படும். புறப்படுங்கள், சகோதரர்களே, புறப்படுங்கள்! உண்மையான தெய்வம் உங்கள் எதிரே இல்லை. அது உங்கள் உள்ளத்திலே...."

எங்கிருந்தோ ஒரு கூரிய கல் விர்ரென்று பறந்து வந்தது. கடகடவென்று ஓசையோடு மரத்தின் மேல் இடி விழுவதுபோல, அந்தக் கல் பிரசங்கியின் மண்டையில் விழுந்தது. ரத்தம் படர்ந்த கையினால், அவன் மக்களிடம் அமைதியை வருவிக்க முயன்றான். பிறகு அவன் ஆவேசத்தோடு, "பைத்தியக்காரர்களே, ஆண்டவன் பேரருள் உடையவன் என்பதை மறக்க வேண்டாம். நீங்கள் எல்லாரும்

ஆண்டவனுடைய குழந்தைகள். உங்கள் ஒவ்வொரு வரிடமும் இருக்கும் பொருள், உங்களுக்கு மட்டும் சொந்தமானதல்ல. அது எல்லாருக்கும்....''என்ருன்.

மேலே அவனுல் ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை. நூற்றுக் கணக்கான துப்பாக்கிகள் ஒரே சமயத்தில் வெடிப்பது போல, நான்கு பக்கங் களிலிருந்தும் கல்மழை பொழிந்தது. பைத்தியம் பிடித்த நாயை அடிப்பது போல, மக்கள் அவனை அடித்துக் கொன்றுவிட்டார்கள்.

அந்த வருஷத்தில் அந்த ஊரில் ஏழைகள் அனைவரும் பட்பட்டென்று செத்தார்கள். மிஞ்சி யிருந்த நாலைந்து பணக்காரர்கள் பயத்தினுல் ஊரைவிட்டு ஓடினுர்கள்.

மனிதப் பூண்டே அற்றுப்போன அந்த ஊரில், இப்பொழுது பாழ்பட்ட அந்தக் கோயில் மட்டுமே இருக்கிறது. சில சமயம் நள்ளிரவிலே அந்தக் கோயில் பிராகாரத்தில் இரண்டு பிசாசுகள் கையைக் கோத்துக்கொண்டு சிரித்தபடி உலாவு கின்றன. அவை இரண்டும் எப்பொழுதாவது கர்ப் பக்கிருகத்தின் அருகில் சென்று, "தெய்வமே, இந்த ஊர் ஏன் இப்படிப் பாழாகிவிட்டது? உனக் குப் பிரார்த்தனை செய்த அந்த மக்கள் எங்கே போனுர்கள்?" என்று ஆண்டவனைக் கேட்கின்றன.

தெய்வம் என்ன பதில் சொல்லுமோ என்று அவை காதைத் தீட்டிக் கொள்கின்றன. பக்கத்து மரத்தில் தூக்கம் கலைந்த பறவைகளின் இறகுகள் படபடவென்று அடித்துக்கொள்ளும் சத்தமே அவற்றின் காதில் விழுகிறது!

# வாழ்க்கைத் துணை

என் தடபுடலைப் பார்த்த என் மனைவி, "எங்காவது வெளியூருக்குப் போகிறீர்களா என்ன?" என்று கேட்டாள்.

டாக்டரின் மனைவிக்கு, அதுவும் தொழிலில் நன்றாக நிலைத்துவிட்ட ஒரு டாக்டரின் மனைவிக்கு, தன் கணவன் நினைத்தபொழுது வெளியூர் போகும் சம்பவம் சகஜமானதுதான். வேறு சமயமாக இருந்திருந்தால், 'இல்லை' என்று தலையை ஆட்டி நான் அவளுக்குப் பதில் சொல்லியிருப்பேன். ஆனால் அன்று ஏனோ என் மனம் மகிழ்ச்சியினால் பொங்கியது. அந்த மகிழ்ச்சியை மறைத்துவைக்க என்னால் முடியவில்லை.

"வெளியூருக்குப் போவதாக இருந்தால், ஒரு மணி நேரம் முன்னதாகவாவது உன்னிடம் சொல்லியிருக்க மாட்டேனா?" என்றேன்

"அது எப்படி?"

"குறைந்த பட்சம் ஒரு மணி நேர முன்னறிவிப்பாவது இல்லாமல் பெண்கள் வீட்டைவிட்டுப் புறப்பட முடியாதே!"

அவள் அதை மறுத்தவள்போல முகத்தைத் திருப்பினாள். ஆயினும் இந்த மறுப்பு, சட்டமறுப்பு இயக்கத்தைப்போல இல்லை. கண் அசைவு, கையை ஆட்டுவது முதலிய ஊமை அபிநயங்களைவிட, முகத்தைத் திருப்புவதனாலே அதிக விஷயங்களைத் தெரிவிக்க முடிகிறது ஒரே ஸ்வரத்தில் பாடகன் முழுப் பாட்டின் கருத்தையும் வெளிப்படுத்துவதுபோல அந்த முகத்திருப்பலினாலே அவள், 'ஆமாம், ஆமாம்!

போகும் இடங்களுக்கெல்லாம் எப்போதும் என்னை அழைத்துப் போவதுபோலத்தான் பேசுகிறீர்கள்!' என்ற கருத்தை வெளியிட்டாள்.

இப்படி அபிநயத்தினுலே பேசும் வல்லமை ஆண்களுக்கு மொத்தத்திலே குறைவுதான். நான் நிலைக்கண்ணாடியின் முன் நின்று, கழுத்துப்பட்டையைக் கட்டிக்கொண்டே, "பிரயாணத்தில் துணைக்கு யாராவது வேண்டாமா?" என்றேன்.

"மனைவியின் துணைதான் வேண்டுமோ?" என்று அவள் நகைத்தபடி கேட்டாள். பெண்ணுக்காகப் பரிந்து பேசுகிறவர் யாராவது அப்பொழுது எங்கள் வீட்டில் இருந்திருந்தால், இப்படி ஆசையில்லாமல் பேசியதற்காக என் மனைவிக்குப் பெரிய பிரசங்கம்-உருப்போட்ட பிரசங்கம்-செய்திருப்பார்கள். ஆனால் அவளுடைய அதிருஷ்டத்தைவிட என் அதிருஷ்டந்தான் பலமாக இருந்தது என்று சொல்லவேண்டும். எவனாவது ஒரு நோயாளியின் உறவினன் என்னைப் பார்க்க வருவதற்கு முன்னால் நான் டென்னிஸ் மைதானத்துக்குப் போய்விட எண்ணினேன். அன்று டென்னிஸ் பந்தயம் முடிவு; ஆதலால் எப்படியாவது போய்விட வேண்டும் என்ற ஆனந்தத்தில்தான் சீட்டியடித்துப் பாடிக்கொண்டிருந்தேன்.

உங்களுக்கு இதைக் கேட்டுச் சிரிப்பு வரலாம். ஒரு டென்னிஸ் பந்தயத்தினால் டாக்டருக்கு என்ன இவ்வளவு மகிழ்ச்சி என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் நான் கேட்கிறேன்: 'டென்னிஸ் பந்தயத்தினால் ஒரு டாக்டர் ஏன் ஆனந்த நடனம் ஆடக் கூடாது?' சிறுபிராயத்தை ஆற்றங்கரையிலே கழித்த ஒருவன் தார் பாலையில் போய் வாழ்ந்தான்

என்று வைத்துக்கொள்ளுங்கள். பிறகு ஐந்தாறு வருஷம் கழித்து ஓர் ஆற்றைப் பார்க்கும்பொழுது நீச்சலடிக்கும் ஆசை அவனுக்கு ஏன் உண்டாகக் கூடாது? என் நிலையும் அப்படித்தான் இருந்தது.

காலேஜில் படித்த காலத்தில் டென்னிஸ் சாம்பியனான புரொபசர் ஒருவரை நான் தோற்கடித்திருந்தேன். அவருக்கு டென்னிஸ் என்றால் ஒரே பைத்தியம்! அவருடைய ஒரே மகன் இறந்த பொழுதுகூட, நாலைந்து நாள் கழித்து டென்னிஸ் மைதானத்துக்கு அவர் வந்துவிட்டதை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் டாக்டர் தொழிலுக்கு வந்ததும் என்னால் டென்னிஸ் விளையாட முடியவில்லை. "அந்த டென்னிஸ் மட்டையை எடுத்துக்கொண்டு தொழிலை அசட்டை செய்தாயானால், கடைசியில் தென்னமட்டையை அடுப்பில் எரிக்கும் தொழில் தான் நீ செய்யவேண்டி யிருக்கும்!" என்று என் தந்தை அடிக்கடி என்னை எச்சரித்தார்.

நல்ல வேளையாக, எனக்குத் தொழிலில் பெரும் புகழ் கிடைத்தது. ஆனால் எந்தப் பந்தயத்திலும் சில காலம் மட்டும் முன்னால் இருந்துவிட்டதனாலே பயனில்லை. ஆதலால் டென்னிஸ் மைதானத்துக்குப் போக எனக்கு ஓய்வே இருப்பதில்லை. ஆனால் தினசரிகளைப் பிரித்ததும் முதலில் டென்னிஸ் ஆட்டத்தைப் பற்றிய செய்திகளைத்தான் நான் படிப்பேன். அது மட்டுமன்று, சில சமயம் கனவிலே அந்தப் புரொபசரோடு டென்னிஸ் விளையாடியதும் உண்டு.

இந்த நிலையில், எங்கள் ஊரில் ஒரு பெரிய டென்னிஸ் பந்தயம் நிகழும்போது, நான் டிஸ்பென்

ஸரிக்கு விடுமுறை அளிப்பது என் குற்றமா? இரண்டு பக்கத்து ஆட்டக்காரர்களும் மகா நிபுணர்கள். பள்ளிக்கூடத்துப் பையன்கள் இந்த மாதிரி நிலையில் வேறு என்ன செய்கிறார்கள்? பெரிய மனிதர்கள் என்றால் மட்டும் என்ன? உலகமாகிய பள்ளிக்கூடத்து மாணவர்கள்தாமே அவர்கள்!

ஜிம்கானா மைதானத்துக்கு நான் சரியான சமயத்தில் போய்ச் சேர்ந்தேன். அவசர அவசரமாக நாற்காலியில் உட்கார்ந்து, வேர்வையைத் துடைத்துக்கொண்டேன். ஒரு தடவை சுற்று முற்றும் பார்த்தேன். என் வலப்புறத்தில் உட்கார்ந்திருந்தவர் யார் என்று நினைக்கிறீர்கள்? சாட்சாத் அந்தப் புரொபசரே! ஐம்பது வயதாகியுங்கூட, அவர் தம் வேலையை விட்டுப் பந்தயம் பார்க்க வந்திருப்பார் என்றுதான் முதலில் நினைத்தேன். பிறகு அவர் நாலைந்து வருஷங்களாகப் பம்பாயிலேயே இருப்பது எனக்கு ஞாபகம் வந்தது.

இந்த மனந்தான் எவ்வளவு விந்தையானது! ஆறுகளைவிட அதற்குத் திருப்பங்கள் அதிகம்; கடலைவிட அதில் நிரம்பியிருக்கும் விதம்விதமான பொருள்கள் அதிகம். டிஸ்பென்ஸரிக்கு வரக்கூடிய பலருடைய திட்டுக்களைப் பொருட்படுத்தாமல், அன்று நான் டென்னிஸ் பந்தயம் பார்க்க வந்திருந்தேன். ஆனால் ஆட்டம் ஆரம்பித்ததும் என் மனம் வேறொரு விளையாட்டைப் பார்ப்பதிலே மூழ்கிவிட்டது. புரொபசரின் முகத்தைப் பார்த்ததும், 'கிழவர் இன்னமும் கட்டுமஸ்தாக இருக்கிறாரே! இல்லாமல் இருக்க என்ன வந்துவிட்டது! தாய்க்குத் தலைப்பிள்ளையும் ஒரே பிள்ளையுமான மகன் இறந்த

போதுகூடக் கண்ணில் ஒரு துளி நீர் வடிக்காதவரைக் காலம் என்ன செய்துவிட முடியும்?' என்று நினைக்கலானேன்.

இவ்வளவு ஆண்டுகள் கழிந்தபிறகும் அந்த விசித்திரமான சம்பவம் இன்றுதான் நிகழ்வது போல என் கண்முன்னல் நின்றது. என்னேடு ஒரே வகுப்பில் படித்த மாதவன் – அப்பாவைப் போலவே ஜோராக டென்னிஸ் விளையாடுவதில் வல்லவன் - ஒரு நாள் காலையில் விஷ ஜுரத்தில் செத்துப்போனன். ஆனல் அன்றைக்கே பன்னிரண்டு மணிக்குப் புரொபசர் பாடம் நடத்த வகுப்புக்கு வந்துவிட்டார்! 'இவர் மனிதரா, அரக்கரா?' என்று மாணவர்கள் நினைத்தார்கள். அவர் மிகவும் அழகாகக் காவியங்களைப் பற்றிப் பிரசங்கம் செய்வார். அவர் இப்படி நடந்து கொண்டதைக் கண்டு நாங்கள் பயந்துபோனேம். தம்முடைய பேச்சுத் திறமையினல் ஒவ்வொரு சொல்லிலும் சுவையைப் பெருக வைக்கும் அந்த அறிஞர், தம் சொந்த மகனுக்காக ஒரு துளியும் கண்ணீர் சிந்தவில்லையே! அங்கே மாதவனுடைய சாம்பல் இன்னமும் அணைந்திராது. அதற்குள் அவனுடைய தந்தை அமைதியாகக் கல்லூரிக்கு வந்து பாடம் நடத்துகிறரே! ஆழமாக வெட்டினல் பாறையில்கூட நீர் சுரப்பது உண்டு. ஆனல் இந்த மனிதர்—!

வேறு ஆசிரியர்கள் வற்புறுத்தி வேண்டிக் கொண்டதனல் அன்று அவர் பாடம் சொல்லவில்லை. ஆயினும் அவருடைய அந்த அமைதியைத் தாங்க ஒருவராலும் முடியவில்லை. நான்கு மணி

வரைக்கும் அவர் கல்லூரியில் படித்துக்கொண்டு இருந்தார். எப்போதும் போல இரண்டு தரம் டீயும் குடித்தாராம்! இன்னமும் ஆச்சரியமான விஷயம் எங்களுக்கு மறுநாள் தெரிந்தது. ஆசிரியர்களின் அறையில் அன்று அவர் ஏதோ வேடிக்கையாகவும் பரிகாசமாகவும் பேசினாராம்! வீட்டிலே பாவம், மாத வனுடைய தாய் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு புலம்புகையில் இவர் இங்கே சிரித்து விளையாடுகிறார்!

மனிதனுடைய நெஞ்சம் எவ்வளவு கடுமையாக இருக்க முடியும் என்பதற்கு இந்தச் சம்பவம் அத் தாட்சியாக இருந்தது. இதை நான் பிறகு மறக்கவே இல்லை. எங்கள் தொழிலில் சாவை அடிக்கடி பார்க்கிறோம். உலகத்தில் கடுமையான மனிதர் களும் கொஞ்சமாக இல்லை. ஆனால் சாவின் தண்மை யான ஸ்பரிசம் பட்டுங்கூட உள்ளம் கலங்காத இப் படி ஒருவரை நான் பார்த்ததேயில்லை. கொடூர மான முகமுடையவர்கள், தீயோர் என்ற பெயர் வாய்ந்தவர்கள், மூப்பினாலே எதிலும் அக்கறை இழந்தவர்கள்-இப்படிப் பலவிதமான மனிதர்களை நான் பார்த்திருக்கிறேன். இவர்களிடம் மனிதத் தன்மை குறைவாக இருப்பதையும் பார்த்திருக் கிறேன். ஆனால் சாவு என்பது அரக்கனைக்கூட மனிதனுக்கும் விந்தையைத்தான் அவர்களிடத்திலே கண்டேன். அப்பொழுதெல்லாம் எனக்கு இந்தப் புரொபசரின் ஞாபகம் வரும். 'இந்தக் காவிய ஆசிரி யர் தமது வாழ்வில் எப்பொழுதாவது அழுதிருப் பாரா?' என்று தோன்றும்.

வேகமாக ஓடும் மோட்டார் வண்டிகளின் கூட்

டத்திலே சாமர்த்தியமாக விலகிச் செல்கிறவனைப் போல, எதிரே நடந்த பந்தயக் காட்சிகள் நடுநடுவே என் சிந்தனைகளைக் கலைத்து எனக்கு மகிழ்ச்சியூட்டின. இல்லாவிட்டால் அங்கு என்னால் உட்கார்ந்திருக்கவே முடிந்திராது.

ஆட்டத்தில் ஒரு ரவுண்டு முடிந்ததும், புரொபசர் என்னைப் பார்த்துச் சிரித்தார்.

"என்னைத் தெரிகிறதா?" என்று கேட்டேன்.

"தெரியாமல் என்ன?"

அவர் என் பெயர், பட்டம், டிஸ்பென்ஸரியின் விலாசம் முதலிய எல்லாத் தகவல்களையும் சொன்னார். உள்ளம் வறண்டிருந்தால் ஞாபகசக்தி வளருமோ என்னவோ! எனக்குப் பின்னும் நம்பிக்கை உண்டாகவேண்டுமென்று நினைத்த அவர், "நீங்கள் மாதவனோடு படித்தீர்கள் அல்லவா?" என்றார். எந்த விஷயத்தை நினைவூட்ட நான் தயங்கினேனோ அதை அவர் மிகவும் அமைதியாகச் சொல்லிவிட்டார். அவருடைய குரலிலே நடுக்கம் இல்லை; கண்ணிலே ஈரம் இல்லை. மாதவன் என்ற சரித்திர புருஷன் ஒருவன் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னால் இறந்துபோனதாக ஏதோ புத்தகத்தில் படித்தவர்போல, அவர் அந்தச் செய்தியைச் சொன்னார்.

அவருடைய இந்த அரக்க இயல்பை நான் வெறுத்தேன். முகம் என்னுடைய உணர்ச்சியை வெளியே காண்பித்திருக்கவேண்டும். ஏனென்றால் அதற்குப் பிறகு அவர் என்னோடு ஒன்றுமே பேசவில்லை. என் மனத்தில் விந்தையான புயல் எழுந்தது. பல சிந்தனைச் சருகுகள் அதில் பறந்

தன. மாதவன் இறந்தபிறகு, இந்தப் புரொபசர் எத்தனையோ நல்ல நூல்களை எழுதி அரிய புகழ் பெற்றார். இத்தகைய அறிவாளியின் உள்ளம் கல்லாக இருப்பானேன்? கலங்கரை விளக்கைப் பாறையின்மேல் நிறுவுவார்களே, அதுபோலத் தானா இவருடைய அறிவு? மைதானத்திலே ஒய்யாரமாக டென்னிஸ் ஆடும் இந்த அறிஞர், வீட்டிலே தம் மனைவியைக் காட்டுமிராண்டித்தனமாக நடத்துவாரோ? ஏன் நடத்தமாட்டார்? அதோ உட்கார்ந்திருக்கிறாளே, அந்த இளம் பெண், மலரின் மணத்தைப்போல அவளுடைய அழகு இந்த இடத்தையே மயக்கிவிட்டது. அவள் தன் வாழ்வில் எத்தனை இளைஞர்களை மயக்கிச் சாக அடித்திருக்கிறாளோ!

டென்னிஸ் மைதானத்திலிருந்து டிஸ்பென்ஸரிக்கும், அங்கிருந்து வீட்டுக்கும் வந்த பிறகுங்கூட என் மனம் அமைதியற்று இருந்தது. வானத்தில் மூட்டம் போட்டிருக்குமே; சூரியனும் தெரியாமல், மழையும் பொழியாமல்! அதுபோல இருந்தது என் மனம்.

நான் சட்டையைக் கழற்றி வைப்பதற்குள் ஒருவன் கடிதமும் காருமாக வந்திருந்தான். கடிதம் புரொபசர் எழுதியது. "தயை செய்து உடனே வாருங்கள். மருந்துகளும் எடுத்து வரவேண்டும்" என்று இருந்தது. யாருக்கு நோய், என்ன நோய் என்பதைப்பற்றி ஓர் அட்சரங்கூட இல்லை.

"சாப்பாடு ஆனபிறகு போகலாமே" என்று என் மனைவி வற்புறுத்தினாள். அவள் பேச்சைக் கேட்காமல் உடனே புறப்பட்டேன்.

புரொபசர் வாசலிலேயே நின்றிருந்தார்.

மூன்று மணி நேரத்துக்குள் அவர் எவ்வளவு கிழவராகிவிட்டார்! எரிகிற கப்பலிலே ஒரே இரவில் ஒரு மாலுமியின் தலை நரைத்துவிட்ட கதையை நான் சிறுவயதில் படித்திருக்கிறேன். புரொபசரின் முகத்திலோ அதையும்விடப் பெரிய மாறுதல் இருந்தது. காலையில் அவர் ஏதோ வேஷம் போட்டுக்கொண்டு வந்தாற்போலவும், இப்போது அந்த வேஷத்தைக் கலைத்துவிட்டு இயல்பான மூப்போடு இருப்பதுபோலவும் எனக்குத் தோன்றிற்று. சுருக்கங்கள் விழுந்த அவருடைய நெற்றியும், பரிதாபமான அவர் கண்களும்!

ஒன்றும் பேசாமல் அவரோடு உள்ளே போனேன். கூடத்துக்கு அப்பால் ஓர் அறை இருந்தது. நான் உள்ளே சென்றதும், நோயாளிக்குப் பக்கத்தில் இருந்தவர்கள் ஒதுங்கினார்கள். சுமார் ஐம்பது வயதுள்ள ஒருத்தி கட்டிலில் அசையாமல் கிடந்தாள். நான் நாடியைப் பார்த்தேன். என் மனம் கலங்கியது. ஆனால் அதை எப்படி வெளியே காட்டிக்கொள்வது? புரொபசர் என்னைக் கூர்ந்து பார்ப்பதைக் கவனித்தேன். சிறு குழந்தை தன் தாயைப் பார்ப்பதுபோல அவர் அந்தப் பெண்மணியைப் பார்த்தார்.

"சரியாகிவிடும் அல்லவா?"

பொய் சொல்வது டாக்டரின் பிறப்புரிமை. நான் சிறிதும் தயங்காமல், "பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஓர் இஞ்செக்ஷன் கொடுத்தால்—" என்றேன்.

இஞ்செக்ஷன் கொடுத்துவிட்டு நான் வெளியே வரும்வரைக்கும் என்னுடைய ஒவ்வோர் அசைவை

யும் அவர் கவனித்தார். பிறகு என்னைத் தமது அறைக்கு அழைத்துப் போனார். "இப்படி உட்காருங்கள்!" என்று ஓர் அழகிய நாற்காலியில் உட்காரவைத்தார்.

மேஜைமேல் நீண்ட காகிதச் சுருள்கள் இருந்தன. புரொபசர் புதிதாக எழுதிய புத்தகங்களின் புரூபாக இருக்கும் என்று நினைத்தேன். நின்றபடியே உலாவிக்கொண்டு அவர் பேசினார்: "காற்று மாறட்டும் என்று இவளை இங்கே அழைத்துவந்தேன். ஆனால்—" என்றார்.

"இந்த நோய் வந்து எவ்வளவு நாள் ஆகிறது?"

"சுமார் மூன்று வருஷங்கள் ஆகின்றன. முதலில் அவள் இதைப்பற்றி என்னிடம் சொல்லவே இல்லை. இந்த இருதயக் கோளாறு—"

அவர் தம்முடைய பேச்சை முடிக்கவில்லை. குறுக்கும் நெடுக்கும் நடந்துகொண்டே இருந்தார். பிறகு என் புறமாகத் திரும்பி, "உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா?" என்றார்.

"மூன்று குழந்தைகள்கூட இருக்கிறார்கள்!"

இதைச் சொன்னபிறகுதான் என் தவறு தெரிந்தது. நாக்கை அழுத்திக் கொண்டேன். 'நம்முடைய மாதவனுக்கும் இவன் வயதுதான். அவன் உயிரோடு இருந்திருந்தால் நாமும் பேரன் பேத்திகளைப் பார்த்திருக்கலாம்' என்று அவர் நினைக்கும்படி செய்துவிட்டேனே! அவர் மனைவியோ மரண வாசலிலே இருக்கிறாள்.

நான் அவரைக் கவனித்தேன். அவர் வேறொரு சிந்தனையிலே ஆழ்ந்திருந்தார். நாலைந்து தடவை சுற்றிவிட்டு அவர் என்னிடம் வந்தார்.

தமது நடுங்கும் கையை என் தோள்மேல் வைத்தார். என்னை அவர் தம் மாணவனாகக் கருதவில்லை; நண்பனாகக் கருதினார். கதியற்ற ஒருவன் பயந்து கொண்டே பிச்சை கேட்பதுபோல இருந்தது அவருடைய தோற்றம். நான் சிறிது எழுந்திருப்பதைக் கண்ட அவர், "உட்காருங்கள்; இது காலேஜ் அன்று!" என்றார்.

வேறு சமயமாக இருந்தால் எனக்குச் சிரிப்பு வந்திருக்கும். அருகில்இருந்த நாற்காலியை இழுத்து அவர் என் எதிரே உட்கார்ந்தபோது அவருடைய கண்ணைப் பார்த்தேன். அந்தச் சூனியப் பார்வையைக் கண்டதும் திடுக்கிட்டேன்.

அவர் என் கையைத் தம் கையில் தாங்கினார். அவருடைய கை நனைந்திருந்தது; நடுங்கியது. அவர், "டாக்டர்!" என்றார். மேலே அவரால் பேச முடியவில்லை.

நான் அவர் கையை அழுத்திப் பிடித்துக் கொண்டு, "இப்படிச் சிறு குழந்தைபோல அதைரியப்படாதீர்கள்" என்றேன்.

"நான் சிறு குழந்தைதான், டாக்டர்!"

அழகான இளம் மனைவி நோய்வாய்ப்பட்டிருக்கும்போது, 'அவள் இறந்துவிடுவாளோ?' என்று தயங்கும் கணவன்மார்களை நான் பார்த்திருக்கிறேன். 'மனைவி இறந்தபிறகு குழந்தைகளை எப்படி வளர்ப்பது?' என்று வருந்தும் கணவன்மாரையும் கண்டிருக்கிறேன். ஆனால், தம்முடைய ஒரே மகன் இறந்தபோதுகூட அசையாத இந்த மனிதர், முதுமையிலே ஐம்பது வயதான மனைவி தம்மை விட்டுப் போய்விடுவாள் என்று இப்படிக் கலங்கு

கிருரே! இதன் ரகசியம் எனக்கு விளங்கவில்லை.

"உண்மையிலே நான் சிறு குழந்தைதான், டாக்டர்! என் தாய் – உங்களுக்கு விந்தையாகத் தோன்றலாம்-ஐம்பத்தைந்து வயதான ஒருவனுக்கு அவனுடைய மனைவிதான் தாயாக இருக்கிருள்!"

நான் அசையாமல் அவரை உற்றுப் பார்த்தேன்.

"டாக்டர், வாழ்க்கைப் பயணந்தான் எல்லாவற்றையும் விடக் கஷ்டமானது. இந்தப் பயணத்தில் எத்தனையோ பேர்களை நாம் சந்திக்கிறோம். ஆனல் உண்மையான துணை - விசித்திரமான இந்தப் பிரயாணத்திலே மனைவியைத் தவிர வேறு துணை யாரும் இல்லை. பையன் பெரியவன் ஆனதும் பெற்றோரின் அன்பு குறைகிறது. மக்களின் அன்புதான் என்ன? இறகு முளைத்ததும் அவர்கள் புதிய கூடு கட்டப் போய்விடுவார்கள்!"

அவரை எப்படிச் சமாதானப் படுத்துவது என்றே எனக்குத் தெரியவில்லை.

"டாக்டர், மாதவன் இறந்துபோன அன்று நான் கல்லூரிக்குப் பாடம் சொல்ல வந்தேன் என்று உலகம் சிரிக்கிறது. ஆனல் உண்மையைச் சொல்லட்டுமா? அப்போது என்னிடம் வேலைகள் மலையாகக் கிடந்தன. அந்த மலைகளைக் கடக்கும் போது, தான் வெயிலிலே இருந்து எனக்கு நிழல் தரும் வாழ்க்கைத் துணைவி என்னேடு இருந்தாள். ஆதலால் அந்த விபத்தை நான் தாங்கிக்கொண்டேன். வீட்டுக்கு வந்த சாவுக்கு நான் சிரித்துக் கொண்டே விடைகொடுத்தேன். ஆனல் மாதவன் செத்த போது நான் மறைத்துவைத்த அந்தக் கண்ணீர்—"

அவர் கண்களில் நீர் துளும்பியது. ஒரு கணம் அவர் மேலே பார்த்தார். பிறகு, "டாக்டர், இருபத்தைந்தாவது வயதிலே மனைவியின் உடலினிடம் மனிதனுக்கு அன்பு உண்டாகிறது. நாற்பதாவது வயதில், தன் குழந்தைகளின் தாய் என்ற வகையில் அந்த அன்பு நிலைக்கிறது. ஆனால் முதுமையிலே வாழ்க்கைத் துணைவி என்ற முறையில் அது வளருகிறது. நீங்கள் ஒருகால் சிரிக்கலாம். ஆயினும் மாதவன் இறந்தபிறகு இந்தப் பதினைந்து ஆண்டுகளில் நான் கண்ட அன்பு! இளமை அன்பு என்பது சாராயத்தைப் போல! உடற்கட்டிலிருந்து விடுபட்டதும் உண்டாகும் அன்பு, தூய அமுதத்தைப் போல அந்தத் தூய அமுதக் கிண்ணத்தை என்னிடமிருந்து பறித்துப் போக யமன் வந்திருக்கிறான் என்று நினைத்தாலே—" என்றார்.

மகிழ்ச்சியைப்போலவே துன்பமும் மனிதனை நிரம்பப் பேச வைக்கிறது. புரொபசர் அந்த நிலையில்தான் இருந்தார். அவர் திடீரென்று எழுந்து உரக்கப் பேசினார். "டாக்டர், நான் இவ்வளவு நூல்கள் எழுதியிருக்கிறேனே; இந்தப் பெருமை முழுவதும் என் மனைவியைச் சார்ந்தது. அவளுடைய தூண்டுதல் இல்லாவிட்டால், என்னைத் தாங்கும் அவளுடைய அன்பு இல்லாவிட்டால்—? அவள் தைரியத்தை இழக்கக்கூடாது என்றுதான், மாதவன் செத்தபோது நான் ஒரு துளியும் கண்ணீர் விடவில்லை. ஆனால் இப்பொழுது—"

உள்ளேயிருந்து அழைப்பு வந்ததனால் நாங்கள் இருவரும் எழுந்து போனோம். இஞ்செக்ஷன் பயன்பட்டது. அந்த அம்மாள் கண்ணைத் திறந்

திருந்தாள். புரொபசர் மனைவியை அணுகினர். நோய்ப்பட்ட அந்த முகத்திலே முறுவலைக் கண்டதும் எனக்கும் மகிழ்ச்சி உண்டாயிற்று.

மனைவியின் நரைத்த தலையை வருடியவண்ணம், 'இப்பொழுது தேவலையா?" என்று கேட்டார் பேராசிரியர்.

"தேவலை, ஆனல் இது என்ன?"

அவர் கண்ணிலிருந்து ஒரு பொட்டு நீர் விழுந்தது. அந்தக் கண்ணீரைத் துடைக்கக் கை நீட்டிய அவர் மனைவி, "டாக்டர் சிரிக்கமாட்டாரா? இச்ச்!" என்ருள்.

நூற்றுக்கணக்கான காதற் கதைகளில் இச்ச் என்ற சொல்லை நான் படித்திருக்கிறேன். ஆனல் அதன் சரியான மோகனப் பொருளை இப்போது தான் தெரிந்துகொண்டேன்.

# வழிபாடு

முதற் புத்தகம் வெளியாகும் சமயத்தில் எழுத்தாளனுடைய நிலைமை எப்படி இருக்கும் என்பது முதற் குழந்தையைப் பெற்ற பெண்மணிக்குத் தான் தெரியும். அவள் சில சமயம் தனக்குள்ளேயே சிரித்துக்கொள்வாள்; சில சமயம் கவலைப் படுவாள்.

முதற் குழந்தை பெற்ற பன்னிரண்டாவது நாள், தாயின் மனம் கனவுலகிலே நடமாடும். வெண் முகிலின் நடுவே சந்திரப் பிறை தோன்றுவது போல, அழகிய கனவிலே அவள் மூழ்கியிருப்பாள். குழந்தையைத் தொட்டிலில் இட்டபிறகும், 'நம் முடைய தாய்மை ஓர் இனிய கனவோ?' என்று அவள் நினைப்பாள். குழந்தை வீட்டிலே சிரித்து விளையாடும்போது, 'இந்தக் குழந்தை நீண்ட ஆயுளோடு வாழவேண்டுமே!' என்ற கவலை அவள் கண் களில் நீரைத் தேங்கவைக்கும். வெளியாருக்கு அது ஆனந்தக் கண்ணீராகத் தோற்றுவது வேறு விஷயம். திருஷ்டிப் பொட்டு இட்ட குழந்தையை அவள் தொட்டிலிலிருந்து எடுத்துப் பாலூட்டும்போது, அந்தக் குழந்தையின் இனிய அமுத ஸ்பரிசம் அவளுடைய கவலைகள் அனைத்தையும் போக்கிவிடும்.

'மழை' என்ற என் முதல் கவிதைத் தொகுதி அன்று வெளிவருவதாக இருந்ததனால் நான் தாயின் மனநிலையிலே இருந்தேன். ஆண் கடுமை யானவன் என்று உலகம் அவனை வீணுக்குப் பழிக் கிறது. அந்தக் கடுமைக்கு உண்மையான காரணம்

இதுதான்: அவன் தாய் ஆக முடியாது. மனித வாழ்விலே மென்மையான உணர்ச்சிகள் அனைத்தும் தாய்மையினால்தான் மலர்கின்றன. தாய்மை என்பது வாழ்விலே இளவேனில்.

என் கவிதை நூலின் வெளியீட்டு விழா வெற்றிகரமாக நடக்குமா? மற்ற எழுத்தாளர்கள் என்னைப் பாராட்டுவார்களா? இப்படிப் பல சந்தேகங்கள் என் உள்ளத்தில் எழுந்தவண்ணமாக இருந்தன. எனக்கு வருத்தத்தைத் தந்த வேறொரு செய்தியும் இருந்தது. பத்து ஆண்டுகளாகக் கடிதங்கள் மூலமாகவும், வருஷத்துக்கு ஒரு தடவை பம்பாயில் சந்திக்கும்போதும் என் கற்பனையைப் பாராட்டி எனக்கு ஊக்கம் தந்தவரும், என் எழுத்திலுள்ள குறைகளைக் கூறி எனக்கு வழி காட்டியவருமான என் குரு கவிராஜ பண்டிதர் அன்றை விழாவுக்கு வர முடியாமல் இருந்தார். அவர் நோய்வாய்ப்பட்டிருப்பதாக முதல் நாள்தான் எனக்குக் கடிதம் வந்தது.

விழா முடிந்ததும் அவரை விசாரிக்க ஜபல்பூருக்குப் போகலாம் என்று எண்ணியிருந்தேன். ஆயினும் அவர் இல்லாத குறை அதனாலே தீர்ந்துவிடப் போவதில்லை. முதல் குழந்தை பிறக்கும் வரையில் பெண் வீட்டில் உணவு கொள்ளாமல் இருந்த பெற்றோர்கள், குழந்தை பிறந்த பன்னிரண்டாவது நாள் வந்து வயிறு நிறையச் சாப்பிட வேண்டும் என்ற ஆசை எந்தத் தாய்க்குத்தான் இராது? ஆனால் அந்தச் சமயத்தில் அவர்கள் வரமுடியாத சந்தர்ப்பம் நேர்ந்துவிட்டால் அவளுக்கு எவ்வளவு வருத்தமாக இருக்கும்? நானும் அப்படித்தான்

சோர்ந்து போயிருந்தேன். 'மழை'யின் தாத்தா அன்று நேரில் வந்து, தமக்கு அர்ப்பித்த அந்த நூலைப் பல பெரிய எழுத்தாளர்களுக்கு முன்னால் பெற்றுக்கொண் டிருந்தால் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகியிருக்கும்! ஆனால் தாத்தா வருவது கிடக்கட்டும்; பெற்ற தாயே அன்று குழந்தைக்குப் பக்கத்தில் இருக்க முடியாதபடி நேர்ந்து விட்டது.

பகல் ஒரு மணிக்கு ஜபல்பூரிலிருந்து தந்தி வந்தது: 'பண்டிதருக்கு மிகவும் ஆபத்து.' மாலை ஆறு மணிக்கு விழா. அது முடிந்ததும் புறப்படலாம் என்றால் நான் போய்ச்சேர ஒரு நாள் தாமதம் ஆகிவிடும். 'ஆபத்து' என்ற சொல் என்னைப் பயமுறுத்தியது. பயங்கரமும் எளிதில் நடைபெறுவதுமான ஒரே ஒரு சம்பவம் உலகத்திலே உண்டு: அதுதான் சாவு! என் கண் முன்னால் விந்தையான பல காட்சிகள் தோன்றின. விழாவிலே புத்தகத்துக்குச் சார்த்திய மாலையை எடுத்துக்கொண்டு நான் ஜபல்பூர் ஸ்டேஷனில் இறங்கும் நிமிஷத்தில், ஒருவன் எதிரே வந்து, "பண்டிதரை இனிமேல் நீங்கள் உயிரோடு பார்க்க முடியாது" என்கிறான். நான் நேரே மயானத்துக்கு ஓடுகிறேன். அங்கே மட்டும் என்ன இருக்கிறது? அணைந்துகொண் டிருக்கும் சாம்பற் குவியல்! அந்த மாலையை அந்தக் குவியலில் வைப்பதனாலே, பண்டிதரைக் கடைசி முறையாகப் பார்க்கும் ஆறுதல் எனக்கு உண்டாகிவிடுமா? இதற்கு மேல் என்னால் சிந்திக்க முடியவில்லை.

என் நண்பன் ஒருவனை விழாவை நடத்தச் சொல்லிவிட்டு, நான் நேரே எக்ஸ்பிரஸைப் பிடித்

தேன். வண்டி பல ஸ்டேஷன்களைத் தாண்டிக் கடகடவென்று ஓடியது. கல்யாணில் நான் வண்டி மாறினேன். நான் ஏறிய வண்டியில் ஒரே கூட்ட மாக இருந்தது. ஆனால் சினிமாக் கொட்டகையில் படம் பார்க்கிறவனுக்குத் தான் தனியே இருப்ப தாகத் தோன்றுவதில்லையா? அதுபோலத்தான் நானும் நினைத்தேன். வண்டியின் கடகடவென்ற தாளத்துக்கு ஏற்றபடி, பண்டிதர் தம்முடைய சோகக் கதையை என்னிடம் சொல்லிக்கொண்டு இருந்தார். அழகிய காதற் கவிதைகள் எழுதும் அந்தக் கலைஞருக்குத் தம் மனைவியினிடம் துளி யும் அன்பு இல்லை. அவருடைய கவிதைகளில் எப் போதும் புதிய புதிய கற்பனைகள் மலரும்; ஆனால் அவருடைய மனத்தில் மட்டும் முட்புதர் பரவியிருந் தது. சிறுவயதிலேயே அவருக்கு மணமாகிவிட்டது. மனைவிக்கு எழுதப் படிக்கத் தெரியாது; கற்றுக் கொள்ளவேண்டும் என்ற ஆசையும் இல்லை; ரசிகத் தன்மையோ பூஜ்யம்! கணவருடைய பெயருக்கு ஏற்றபடி வெளிப் பார்வைக்கு நடந்துகொள்ளவும் அவளுக்கு அறிவு இல்லை!

பம்பாயில் வருஷந்தோறும் சந்திக்கும்போது, பண்டிதர் எத்தனையோ தடவை தம்முடைய மனப் புண்ணை எனக்குச் சொல்லியிருக்கிறார். இந்தப் புண்ணினால் அவருடைய காவியவன்மை குன்றி யிருக்கும் என்றுகூட நான் நினைப்பதுண்டு. ரசிகத் தன்மையுள்ள மனைவி அவருக்குக் கிடைத்திருந் தால், இந்த மகாகவியை உலகமே வழிபட் டிருக்குமே!

அவருடைய வாழ்வில் நிகழ்ந்த இரண்டொரு

வருத்தமான சம்பவங்கள் என் மனத்திலே பதிந்து விட்டன. ஜன்னலிலிருந்து வெளியே மங்கலான நிலவைப் பார்க்கும்போது மர நிழல்கள் தென்படு வதுபோல அவை எனக்குத் தோற்றின. பண்டித ரின் ஒரு காதல் கீதம் ரிகார்டு ஆகி, பொதுமக்க ளின் பிரியத்தைச் சம்பாதித்திருந்தது. அவருடைய வேலைக்காரன் முதல் காபிக்கிளப் முதலாளிவரைக் கும் எல்லாரும் அதை எப்போதும் பாடிக்கொண்டு இருப்பார்கள்.

வெகு நாள் கழித்துப் பண்டிதர் தம் மனைவி யைப் பார்த்து, "இந்தப் பாட்டைக் கேட்டாயா?" என்றார்.

"அதில் அப்படி என்ன இருக்கிறது சனியன்? தெய்வத்தின் பெயரைச் சொன்னாலும் புண்ணியம் உண்டு! 'நான் கிளி, நீ மைனா' என்று எவனாவது ஒரு போக்கிரி இதைப் பாடிக்கொண்டு பெண்களைப் பார்ப்பான். இந்த மாதிரி ஆபாசங்கள் எனக்குப் பிடிப்பதில்லை!"

இந்த விமரிசனத்தைக் கேட்டுப் பண்டிதர் திகைத்துவிட்டார். அந்தப் பாட்டைத் தாம் பாடி யிருப்பதாகச் சொல்லும் துணிவே அவருக்கு உண் டாகவில்லை. ரசிகத்தன்மை சூனியமாக இருக்கும் இடத்திலே காவியத்தை வர்ணிப்பதனாலே என்ன பயன்?

'நாஸ்திகன்' என்ற அவருடைய சிறுகாவியம் பெரும் புகழ் பெற்றது. தேசபக்தர்களும் சீர்திருத்த வாதிகளும் சமஸ்தான மன்னர்களும் அவரைப் பாராட்டினார்கள். அந்தக் கடிதங்களில் ஒன்றை அவர் தம் மனைவிக்குப் படித்துக்காட்ட முயன்றார்.

அந்தக் காவியத்தில் அவர் தெய்வத்தைத் தாக்கியிருக்கும் செய்தி அவளுக்கு முன்னமே எட்டியிருந்தது. ஆதலால் அவள் அந்தப் பாராட்டைக் காது கொடுத்தே கேட்கவில்லை.

இந்தக் காவியப் புகழ் பல பெரிய மனிதர்களை வெகு தூரத்திலிருந்து அவருடைய வீட்டுக்கு அழைத்துவந்தது. இப்படி வந்த ஒருவர் நான்கு நாட்கள் அவர் வீட்டிலே தங்கியிருந்து ஒரு புதிய செய்தியை வெளியிட்டார். 'நாஸ்திகரின் வீட்டில் தெய்வ வழிபாடு' என்ற தலைப்பில், பண்டிதரின் மனைவி தினமும் எவ்வளவு நேரம் பூஜை செய்கிறாள் என்பதை அவர் வர்ணித்திருந்தார். நிலாவின் நிழலைப் பார்த்து நாய்கள் குரைப்பதில்லையா? அது போல, விஷயம் கிடைக்காத பத்திரிகைகளும் வேலையில்லாத எழுத்தாளர்களும் பண்டிதரைத் தாக்கினார்கள். மனைவியினால் தமக்கு இந்த நிலைமை நேர்ந்ததனால் அவர் அவளிடம் கோபித்துக்கொண்டார்.

ரோம் நகரம் எரிந்தபோது பிடில் வாசித்த நீரோவைப்போலவே, இந்த உலகமும் கொடுமை நிறைந்ததாகத்தான் இருக்கிறது. நிலவையும் நிழலையும் அது பிணைத்துவைக்கிறது. கற்களை வழிபடுவதற்காக மலர்களை உண்டாக்குகிறது. உண்மையிலே கற்கள் அல்லவா கற்களை வழிபடவேண்டும்?

* * *

ஜபல்பூருக்குப் போனதும் பண்டிதருக்கு உடல் நிலை சீர்திருந்தி யிருப்பதைக் கண்டு எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. அவருடைய வயிற்று நோய்க்குப் பம்பாயிலேயே ஆபரேஷன் செய்வது தான் நல்லது என்று உள்ளூர் டாக்டர் சொன்னார்.

உடம்பு சற்றுச் சரியானதும் பம்பாய்க்குப் போவதாக ஏற்பாடு ஆயிற்று. என் வருகை அவருக்கு மன அமைதியைத் தந்தது. ஆகவே அவர் புறப்படும் வரைக்கும் நானும் அங்கே தங்கினேன். பம்பாய்க்கு யார் யார் போவது என்று உறவினர்களிடையே கேள்வி எழுந்தது. பண்டிதருடைய மூத்த புதல்வி உட்பட எல்லாருமே, அவருடைய மனைவியை அழைத்துப் போகக்கூடாது; அதனால் தொந்தரவு தான் உண்டாகும் என்று முடிவு கட்டினார்கள்.

முன்னால் காதில் விழுந்த விஷயங்களைக் கொண்டு மட்டுமல்ல; நேரில் அவளுடைய நடவடிக்கையைப் பார்த்ததனால் நானும் அந்த முடிவுக்கே வந்தேன். அவள் தன் கணவரின் அறையிலே ஐந்து நிமிஷநேரங்கூடப் பொருந்தியிருக்க மாட்டாள். நடுநடுவே என்னைப் போன்றவர்களைப் பார்த்து, "எப்படி இருக்கிறது?" என்று சமையலறையிலிருந்தே கேட்கும் தந்திரம் மட்டும் அவளுக்கு இருந்தது. ஊரிலிருந்த பலர் அவருடைய உடல் நிலையை விசாரிக்க ஓயாமல் வந்து போய்க்கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களில் யாரோடும் அவள் பேசியதை நான் பார்த்ததில்லை. 'டைம்ஸ்' பத்திரிகையில் அப்போது அவருடைய படமும், அவர் நீண்ட நாள் வாழவேண்டும் என்று பத்திராதிபர் குறிப்பும் வெளிவந்திருந்தன. அன்று வீட்டிலே எல்லாரும் அந்த இதழை ஆவலோடு பார்த்தார்கள். பண்டிதரின் மேன்மைக்கு இதைவிட வேறு அத்தாட்சி என்ன வேண்டும்? யாரோ அந்த இதழை எடுத்துப் போய் அவருடைய மனைவிக்குக் காண்பித்தார்கள். அவள் அதைப் பார்த்துவிட்டு,

"எனக்கு இந்த இங்கிலீஷ் படிக்கவே தெரியாதே!" என்றாள். ஜபல்பூர் பாறைகளுக்குப் பேர் போனது என்பார்களே, அது சரிதான் என்றே எனக்குத் தோன்றிற்று.

பண்டிதர் தம் மனைவியிடம் கொண்டிருந்த வெறுப்பு நியாயமானதுதான் என்று நிரூபிக்கும் சம்பவங்கள் தினமும் நடந்தன. 'இந்தப் பெண் மணிக்கு உள்ளமே இல்லையோ? வீட்டிலே யந்திரத்தைப்போல இருந்து இவள் எப்படி ஆறுதலடைகிறாள்?' என்ற கேள்விகள் என் நெஞ்சிலே எழும்.

அவளைப்பற்றிப் பண்டிதர் சொன்ன அபிப்பிராயம் எனக்கு உறுதிப்பட்டபோதிலுங்கூட, அவரிடம் எனக்கு இருந்த மதிப்பு மட்டும் பழக்கத்தினாலே குறைந்துவிடவில்லை. முன்பெல்லாம் பம்பாயில் இரண்டொரு நாட்களே நாங்கள் சந்திப்போம். ஆதலால் அந்தச் சந்திப்பின் மகிழ்ச்சியிலும், சம்பாஷணை வேகத்திலும், பிரிவுத் துயரத்திலும் நான் பண்டிதரைப்பற்றி அந்தரங்கமாகச் சிந்தித்ததில்லை. ஆனால் இப்போது நாள் முழுவதும் அவரோடு பழகும் சந்தர்ப்பம் கிடைக்கவே, அவருடைய கவிதை வன்மை ஒன்று தவிர, மற்றப்படி அவரும் சாதாரணமனிதரே என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. அவருடைய அவ்வளவு பெரிய வீட்டிலே காந்தியடிகளின் படமோ வேறு தேச பக்தர்களின் படமோ ஒன்றுகூட இல்லாதது முதல் நாளே வியப்பைத் தந்தது. தினமும் நான் பத்திரிகைகளைப் படிக்கும்போது; "இந்த அரசியலைக் கேட்டாலே எனக்குத் தலைவலி வந்துவிடுகிறது. ஏதாவது வேடிக்கையான செய்தி இருந்தால் படியுங்கள்" என்பார்.

அவருடைய இந்தப் பேச்சைக் கேட்டு நான் அலுத்துக்கொள்வேன். அவர் என்ன, நான் என்ன, நாட்டிலே இன்னும் லட்சக்கணக்கான மக்கள் என்ன - எல்லாரும் விடுதலைப் போரிலே கலந்து கொள்ள முடியவில்லை. ஆனால் நம் நாட்டின் கொடி உயரப் பறக்கும் பாக்கியத்தைக் கண்ணால் காண்பதற்கு யாருக்குத்தான் ஆசை இராது? இப்படி வறட்சியான ஒருவர்—

அதற்குமேல் என்னால் சிந்திக்கவே முடியாது. பண்டிதர் பத்திரிகையை உள்ளே வைக்கச் சொல்வார். பிறகு கதைகள் ஆரம்பிக்கும். அவையாவது சுவையாக இருக்குமா? திலகருக்குத் தீவாந்தரச் சிட்சை ஆன அன்றைக்கு, இவருடைய 'நாஸ்திக' னுக்குப் பொற்பதக்கம் கிடைத்ததாம். இவருடைய நண்பர் ஒருவர் பேடாவும் பர்பியும் வாங்கிவந்தாராம். இந்த மாதிரியான கதைகள் எனக்கு ஊசியால் குத்துவதுபோல இருக்கும். என் மனப்பான்மை வேறு, இவருடைய மனப்பான்மை வேறு. ஸ்டீவன்ஸன் எழுதிய ஒரு நாவலில், ஒருவனே நல்லவனாகவும் தீயவனாகவும் இருக்கமுடியும் என்று காண்பித்திருக்கிறான். கலைஞர்களும் இப்படித்தானோ என்று எனக்குத் தோன்றிற்று.

மரணம் நெருங்கும்போது மனிதன் பெரியவனாகிவிடுகிறான் என்று நான் நினைத்திருந்தேன். அதுவும் பொய்யாயிற்று. தம்முடைய நோய் உயிரையே கவரக்கூடும் என்று அவருக்குத் தெரிந்திருந்தது. ஆயினும் மரணவாசலிலிருந்து வாழ்வைப் பார்க்கும்போது அவருக்குப் புலப்பட்ட பொருள்களில் உயர்ந்தது, அழகானது, பிரம்மாண்ட

மானது எதுவுமே இல்லை. கபடமற்ற நட்பின் நினைவுகளோ, உன்னதமான காதல்ஓவியங்களோ, லட்சியப் பித்தினாலே பறந்துவிட்ட தூக்கமோ—இப்படி எவ்விதச் செய்தியும் அவருடைய பேச்சிலே இல்லை. இன்ன விருந்திலே இன்ன பணியாரம் ஜோராக இருந்தது; எந்தக் கூட்டத்திலே யாரை யார் இழித்துப் பேசினார்கள்— இவைபோன்ற செய்திகளே இருந்தன. பழக்கத்தினால் பாலும் புளிக்கும் என்பது சரியாகவே பட்டது எனக்கு.

* * *

பம்பாய்க்குப் புறப்படுவதற்கு முதல்நாள் இரவு பத்து மணி. நான்பண்டிதரோடு தனியாகப் பேசிக் கொண்டு இருந்தேன். அவர்மனைவி ஓவல்டின் எடுத்துக்கொண்டு உள்ளே வந்தாள். மறுநாள் அவர் ஆபரேஷனுக்காகப் பம்பாய் போவதால் இருவரும் தாராளமாகச் சிறிது நேரம் பேசிக்கொள்ளட்டும் என்று எண்ணி, நான் மெதுவாக வெளியே வந்தேன்.

வெளியே இருட்டைப் பார்த்ததும், 'இருட்டில் தான் தாரகைகள் பளிச்சிடுகின்றன. பண்டிதருடைய மனைவியின் தன்மையிலே தாரகைகள் எங்கே இருக்கின்றன?' என்று நான் சிந்திக்கலானேன். அதற்குள் அவளே வெளியே வந்தாள். ஓவல்டின் குடிக்கும் நேரந்தான் அவள் அந்த அறைக்குள்ளே இருந்தாள். உள்ளே போய்க் கொண்டே அவள் என்னிடம், "அவருக்குத்தூக்கம் வரும்வரைக்கும் அவரோடு ஏதாவது பேசிக் கொண்டு இரு. இல்லாவிட்டால் அவர் எதையாவது

நினைத்துக்கொண்டு அவஸ்தைப்படுவார். நாளைக்கு வெகு தூரம் பிரயாணம் போகவேண்டும்!" என்றாள்.

எனக்கு உபதேசம் செய்யும் இந்த அம்மாள், தானே அங்கே ஏன் உட்காரக் கூடாது என்று நினைத்தேன்.

இரவுமுழுவதும் நான் இதைப்பற்றியே எண்ண மிட்டதனால், மறுநாள் காலையில் அவள் என்னைக் கூப்பிட்டு ஆள் அனுப்பியபோது, நான் அசட்டை யுடன்போனேன். அவள் பூசையறையில் உட்கார்ந் திருந்தாள். ஊதுவத்தியின் மணத்திலிருந்தும், தெய் வத்தின்மேல் தூவியிருந்த மலர்களிலிருந்தும், அப் பொழுதுதான் அவளுடைய பூசை முடிந்திருக்கும் என்று தோன்றிற்று. இவ்வளவு அதிகாலையில் வழிபாட்டை முடிப்பதற்கு அவள் எப்பொழுதோ கண்விழித்திருக்கவேண்டும்.'மரப்பெட்டியில் இருக் கும் இந்தக் கல் தெய்வத்துக்கு நாள்தோறும் தவ றாமல் பூசைசெய்ய இவளுக்குத் தெரிகிறதே. வீட் டில் நடமாடும் தன் வாழ்வுத் தெய்வமாகிய ரத்தி னத்துக்கு மலர்கள் தூவ மட்டும் இவளுக்குத் தெரிய வில்லையே?' என்று நினைத்துக்கொண்டே மேலே பார்த்தேன். காந்தியடிகளின் படம் மாட்டியிருந் தது. வெறும் படம் மட்டுமன்று; சந்தனப் பொட்டு இட்டு, அதற்கு மாலையும் சாத்தியிருந்தது.

பூசையறைக்கு வெளியிலேயே நான் நின் றேன். அவள் என்னைப் பார்த்து, "உட்காரேன்" என்றாள். தான் உட்கார்ந்திருந்த மான் தோலைத் தவிர அங்கே வேறு ஏதுமில்லை என்பதைக் கவ னித்த அவள், அந்த மான் தோலை என் முன்னால் பரப்பினாள்.

"நீங்கள் தரையிலா உட்காரப்போகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"பூமி நம்முடைய தாய். அம்மாவின் உடம்பு குழந்தைகளுக்கு உறுத்துமா என்ன?"

பார்வைக்கு முட்டாளாகவும் பண்டிதருடைய வாழ்க்கையை ரசமற்றதாகச் செய்கிறவளுமான அவர் மனைவியா இதைப் பேசுகிறாள்? எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"அப்படியானால் நானே தரையில் உட்காருகிறேனே. பூமி நம்முடைய தாய்தானே!" என்றேன்.

"இந்தக் காலத்துப் பிள்ளையான நீ யாருக்கும் தோற்க மாட்டாய். அப்படியானால் இந்த ஆசனத்திலேயே இருவரும் உட்காருவோம். இப்படிக் கூச்சப்படாதே நீ என் மகனைப்போல!"

'மகனைப்போல' என்று சொன்னபோது அவள் முகத்தில் தோன்றிய வாத்சல்யம் என்னைக் கவர்ந்தது. நான் அவளருகில் அமர்ந்தேன்.

அவள் தெய்வத்தைப் பார்த்துக்கொண்டே, "மகனைப்போல என்று நான் தவறாகச் சொல்லி விட்டேன். தாயாக இருந்து உன்னுடைய துன்பங்களை நான் தீர்க்கவில்லை. நீ மட்டும் மகனாகவே இருந்து என் துன்பங்களைப் பங்கிட்டுக் கொள்கிறாய்!" என்றாள்.

எனக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. பண்டிதர் எனக்கு மட்டான உதவிகளா செய்திருந்தார்? அவள் பிறகு தழுதழுத்த குரலில், "நீ வந்ததிலிருந்து அவர் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறார், தெரியுமோ! அவருக்கு உடம்பு நன்றாகக் குணமாகும் வரைக்கும் நீ பம்பாயிலேயே இருக்க

வேண்டும். நான் ஆணையிட்டுச் சொல்கிறேன். இது தாயின் ஆணை'' என்றாள்.

கண்ணீர் வெளியே தெரியக்கூடாதென்று அவள் சிரித்தாள். திரைகள் விழுந்த அந்த முகத்திலுங்கூட அந்தச் சிரிப்பு மகிழ்ச்சியைத் தந்தது.

பண்டிதருக்கு உடல்நிலை சரியாகும்வரைக்கும் நான் அவரிடமே பம்பாயில் இருப்பதாக வாக்குக் கொடுத்தேன். அதைக் கேட்டதும் அவளுக்கு ஆறுதல் உண்டாயிற்று.

அவள் என் கையில் ஒரு பொட்டலத்தைக் கொடுத்து, "இந்த விபூதியை நாள்தோறும் அவருக்கு இடு. ஆனால் நான் கொடுத்ததாக அவரிடம் சொல்லவேண்டாம். அவர் நன்றாகத் தூங்கியபிறகு இதை இடு!'' என்றாள்.

தெய்வபக்தியை அபினியாக நினைப்பவன்கூட அந்தப் பொட்டலத்தை வாங்கிக்கொள்ள மறுத்திருக்கமாட்டான். தெய்வத்தை நம்பும் என்னைப் போன்றவனைப்பற்றிக் கேட்க வேண்டுமா? நான் அதைப் பேசாமல் வாங்கிக்கொண்டேன்.

"நீங்களும் பம்பாய்க்கு வாருங்களேன்!'' என்று என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

அவள் வருத்தத்தோடு சிரித்துத் தலையசைத்தாள். அந்தச் சிரிப்பிலே அவளுடைய வாழ்வின் துயரம் உருவெடுத்திருந்தது. ஆயினும் நான் அவளுக்கு நம்பிக்கை உண்டாக்குவதற்காக, "நான் விளையாட்டுக்குச் சொல்லவில்லை!'' என்றேன்.

"அதுதான் எனக்கும் வருத்தமாக இருக்கிறது. என் வாழ்வில் இதுவரைக்கும் யாரும் என்னைப் பரிகாசம் செய்யவில்லை.நான்வாழ்வில்அடியெடுத்து

வைத்தபோது, 'இது சிப்பிகளின் விளையாட்டு' என்று நினைத்தேன். அந்த அநுபவத்தைப் பெற்றவர்கள் பாக்கியசாலிகள். இப்பொழுது என்னை யாராவது கேட்டால், 'இது துப்பாக்கி ரவைகளின் விளையாட்டு' என்று சொல்வேன்'' என்றாள்.

படிப்பு இல்லாதவர்களைப் பற்றி நாம் எவ்வளவு தவறாக நினைக்கிறோம்! அவர்களால் நன்றாகப் பேசமுடியாது; தங்கள் கொள்கைகளைத் தெளிவாக வெளியிட முடியாது; அவர்கள் பேச்சு அரைகுறையாக இருக்கும் என்றெல்லாம் நாம் கருதுகிறோம். கிளிப்பிள்ளைபோலப் புத்தகங்களை உருப்போடும் பழக்கமில்லாத அவர்களிடந்தான் இயல்பான காவியமும் பேச்சும் பிறக்கின்றன.

"நீங்கள் பம்பாய்க்கு வரத்தான் வேண்டும். இது என் ஆணை; மகனுடைய ஆணை!'' என்றேன்.

அவள் நகைத்தபோது கண்களில் நீர் துளும்பியது. தழுதழுத்த குரலில், "இப்படியெல்லாம் ஆணையிடாதே! நான் ஏன் வரவில்லை என்பது உனக்குத் தெரிந்தால்—'' என்றாள்.

"மகனிடம் தாய் எதையும் ஒளித்து வைப்பதில்லை!''

அவள் என் முதுகை அன்போடு தட்டி, "இது அப்படியன்று'' என்றாள்.

நான் அவளைச் சிறிது கோபத்தோடு பார்த்தேன். 'என்னிடங்கூட உங்களுக்கு நம்பிக்கை இல்லையா?' என்ற கேள்வி அந்தப் பார்வையில் இருந்தது.

அவள் மெதுவாகப்பேசினாள்: "அப்படியன்று. ஐந்து விரல்களும் சமமாக இருப்பதில்லை. எல்லாப்

பிள்ளைகளிடமும் தாய் மனம் விட்டுப் பேசுவாள் என்று சொல்ல முடியாது. நீ யாரோ ஒருவன். நேரே எங்கள் வீட்டுக்கு வந்தாய்; சொந்த மகன் போலப் பழகுகிறாய். இப்படிப்பட்ட பக்தியைப் பார்த்தால், நாம் வீணுக்குத் தெய்வத்தை வழிபடுகிறோம் என்று தோன்றுகிறது. அதைவிட மனிதர்களையே—"

"இப்படிப் புகழ்வதனாலே நான் என் பிடிவாதத்தை விட்டுவிட மாட்டேன்!"

"வேறு எது வேண்டுமானாலும் கேள்; இது மட்டும் வேண்டாம்!"

"ஏன்?"

"அவருக்குக் கஷ்டமாக இருக்கும்."

"பண்டிதருக்கா?"

"வேறு யாருக்கு?"

அவள் வருவதனாலே பண்டிதருக்கு ஏன் கஷ்டமாக இருக்கும் என்பது எனக்கு விளங்கவில்லை. இப்போது மட்டும் அவளால் அவருக்குத் தொந்தரவு இல்லாமலா இருக்கிறது?

அவளே பேச ஆரம்பித்தாள்: "இங்கே நிறையப் பேர் இருப்பதனால் எனக்கு வசதியாக இருக்கிறது. அங்கே மனிதர்கள் குறைவாக இருப்பார்கள். அதிலும் ஆபரேஷன் வேறு. நோயாளிகளுக்கே எப்போதும் பொறுமை குறைவாக இருக்கும். போதாக்குறைக்கு நான்..."

என் ஆவல் வளர்ந்தது. "அப்படி நீங்கள் என்னதான் செய்துவிட்டீர்கள்?" என்று கேட்டேன்.

"என்ன செய்தேனா? அவருடைய வாழ்க்கை முழுவதையும் வீணாக்கி விட்டேனே! எனக்காக

அவர் நீண்ட நாள் குழறிக்கொண்டே இருந் தார். அதற்கு நான் என்ன செய்வது? அவருடைய கவிதையைப் புரிந்துகொள்ளும் அறிவை ஆண்ட வன் எனக்குக் கொடுக்கவில்லை. அப்படி அந்த அறிவு இருந்தாலும் நான் என்ன செய்யப் போகி றேன்? போரிலே சண்டையிடும் சிப்பாய்களுக்குத் தங்கள் வீரம் மட்டுமே தெரிகிறது. பின்னாலே அவர் களுக்காக ரொட்டிச் சுடுபவர்கள் எவ்வளவு கஷ்டப் படுகிறார்கள் என்பது அவர்களுக்குத் தெரியாது. இல்லறமும் அதைப் போன்றதுதான், குழந்தாய்! ஆனால் பெரிய மனிதர்களுக்குக்கூட இது தெரிவ தில்லை.''

கடற்கரையிலே வாழ்பவர்கள் சொல்வது உண்டு. கடல் பொங்கும்போது காயம் பட்டால் ரத் தம் வடிவது விரைவில் நிற்காதாம். பண்டிதருடைய மனைவியின் உள்ளத்திலிருந்து, அவளுடைய உண் மையான நிலைமை விளங்கியது. நான் பேசாமல் கேட்டேன். அவளுடைய முகம் முன்னைவிடச் சிவந் திருந்தது. அவள் ஆவேசத்தோடு பேசினாள்: "உடன்கட்டை ஏறுவது நின்றுவிட்டது என்கிறீர் களே; அது பேச்சளவில்தான்! பெரிய சீர்திருத்த வாதிகளின் வீட்டில்கூட இன்னமும் அது நடை பெறுகிறது. பழங்காலத்தில் பெண்ணை நன்றாகச் சிங்காரித்து உடன்கட்டை ஏற்றுவார்கள். புதிய சீர்திருத்தவாதிகள் அப்படிச்செய்வார்களா? வீட்டு அடுப்பிலேயே மனைவி வாழ்நாள் முழுவதும் எரிய வேண்டியது; ஆண்மகன் வெளியே கூட்டங்களில் மாலைபோட்டுக் கொள்ள வேண்டியது! உடன் கட்டை ஏறும் பெண்ணுக்கு ஒரு நாழிகை நேரந்

தான் துன்பம் இருக்கும்; எங்களுடைய துன்பமோ ஜன்மம் முழுவதும் ஓயாதது. முன்பெல்லாம் குற்ற வாளிகளைச் சுவரில் வைத்து அறைவார்களாம். இந்தச் சீர்திருத்தக் காலத்தில் பெண்களுக்கு அந்த அநுபவம் தவறுவதில்லை. ஒரு சுவருக்குப் பதில் நான்கு சுவர்கள் ஆகியிருக்கின்றனவே; இது தான் சீர்திருத்தம்!"

என் முகத்தில் எதையோ கண்டு அவள் சிறிது பேச்சை நிறுத்தினள். பிறகு பேசலானுள்: "இவ ளுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதோ என்று நீ நினைக்கலாம். நான் பைத்தியமாக இருந்தால் அது எப்போதோ ஆகியிருக்கவேண்டும். திலகர் சிறைக் குச் சென்ற அன்று நான் உபவாசம் இருந்தேன். ஆனல் அன்று எங்கிருந்தோ வீட்டில் பேடாவும் பர்பியும் வந்தன. இவருக்குப் பொற்பதக்கம் கிடைத்ததாம்! நான் அன்று காலைமுதல் தண்ணீர் கூடக் குடிக்கவில்லை. ஆனல் இவர் துர்வாசாவாகக் கோபித்துக்கொண்டார். ஒரே ஒரு பேடாவை வாயில் போட்டுக்கொண்டேன். அது எனக்கு விஷ மாக இருந்தது. அதைப்பற்றி இவருக்கு என்ன?" அவள் குரல் நடுங்கியது.

அவள் பேச்சைத் தொடர்ந்தாள்: "நான் காந் திய இயக்கத்தில் சேருவதாக இருந்தேன். கிரா மத்து ஜனங்களும் சிறுவர்களுங்கூடப் பெரிய தியா கம் செய்கிருர்களே; நாம் ஏதாவது செய்யக் கூடாதா என்று நினைத்தேன். வீடுகுட்டிச்சுவராய்ப் போகுமே என்ருர். விருந்தாளிகளும் குழந்தைகளும் நோய்நொடியுமாக இருந்த இந்த வீட்டை நான் அத்தனை நாள் நடத்தவில்லையா? இந்த வீட்டுவேலை

யைத் தவிர எனக்குக் கவிதை தோன்றவில்லை, பிடிக்கவும் இல்லை. வீட்டிலே குழந்தைகள் வளர்ந் தார்களே; ஒரு நாளைக்காவது அவர் இரவு கண் விழித்திருக்கிருரா, கேட்டுப்பார். அவர் சுகமாக இருக்கவேண்டும் என்று நான் அடிமையானேன். ஆனல்—''

அவள் திடீரென்று பேச்சை நிறுத்தினள். ஓடுகிற மான் மேலே வழியைக் காணுமல் நிற்பது போல அவள் நின்ருள். தெய்வத்தைப் பார்த்து அவள் கைகூப்பி வணங்கினள். பிறகு அமைதியாக, "அவருக்கு ஓய்வு கிடைக்கத்தான் வேண்டும். நாள் முழுவதும் உத்தியோகம்; அதனேடு இந்தக் கவிதைப் பித்து. அது தவறு என்று நான் சொல்லவில்லை. ஒரு பெரிய கவிவாணரின் மனைவி என்ற பெரு மிதம் எனக்கு மட்டும் இல்லையா? ஆனல் குழந்தாய், அன்பையும் பெருமிதத்தையும் வெளியே காண்பித் துக்கொள்ளக்கூடாது. நான் ஆண்டவனிடம் ஒன்று தான் கேட்கிறேன்: அவருக்கு முன்னல் என் கண் மூடிவிட்டால் எனக்கு எல்லாம் கிடைத்தாற்போல. 'இன்னருடைய மனைவி காலமானள்' என்று பத்திரிகைகளில் என் பெயரும் வரும்'' என்ருள்.

மனத்தில் இருந்த வருத்தத்தை மறைப்பதற் காகத்தான் அவள் இதைச் சொன்னள். இந்தப் பேச்சைக் கேட்டதும் எனக்கு அழுகை வந்துவிட் டது. "அழாதே, குழந்தாய்!" என்று என்னைச் சமாதானப்படுத்திக்கொண்டே அவள் கண்ணீர் வடித்தாள். அவள் கொடுத்த விபூதியைவிட இந்தக் கண்ணீர் பண்டிதருடைய உடம்பைக் குணமாக்கும் என்று எனக்குத் தோன்றியது.

பண்டிதரின் ஆபரேஷனும், என் கவிதைத் தொகுதியான 'மழை'யும் வெற்றிகரமாயின. அடுத்த கவிதைத் தொகுதியான 'பனி' என்ற நூலை நான் பண்டிதரின் மனைவிக்கு அர்ப்பணம் செய்தேன். அதைக் கண்ட பண்டிதர், "பூவோடு நாரும் மணக்கும் என்பார்களே, அதுவும் உண்மைதான்!" என்று எழுதினார்.

"இது அந்த ஸ்தலத்திலுள்ள தெய்வத்துக்குச் செய்த வழிபாடு" என்று நான் அவருக்குப் பதில் எழுதினேன்.

## மூன்றும் நம்பர் நாற்காலி

தொப்பி சரியாகத் தலையில் விழுந்திருக்கிறதா என்பதை நிலைக்கண்ணாடியில் பார்த்துக்கொண்டே யிருக்கையில், பக்கத்தில் இருந்த படத்தின்மீது என் கவனம் சென்றது. என் உள்ளக் கண்ணாடியில் விழுந்த அந்தப் படத்தின் நிழல் உடனே என் கண் முன்னால் தோன்றியது. அந்தப் படத்தில் இருந்த சாந்தா— ஒளி வீசும் இந்தக் கண்கள், மென்மை யான உதடுகள், மலரிலிருந்து மணம் வீசுவதுபோல இந்த இதழ்களிலிருந்து மெதுவாக வெளிவரும் இன்மொழிகள்— இவ்வளவும் இப்போது எங்கே? கண்ணாடியைப் போலவே உள்ளமும் தன் எதிரில் இல்லாத பொருள்களை மறப்பதாக இருந்தால் எவ்வளவு நல்லது!

அலங்காரம் செய்துகொண்ட சாந்தாவின் அழகிய உருவத்தை இந்தக் கண்ணாடி எத்தனையோ தடவை பார்த்திருக்கிறது. ஆயினும் அது தன் உள் ளத்தில் அவளுக்கு இடம் தரவில்லை. அதற்கு நேர் மாருக, என் உள்ளத்திலே சாந்தாவின் பல வடி வங்கள் குடிகொண்டுவிட்டன. உள்ளமாவது! அது கோயிலாகிவிட்டிருந்தது.

முதல்முதலில் நான் அவளைப் பார்க்கப்போன பொழுது கண்ட வடிவம்— முதல் சந்திப்பை யாரா வது மறப்பார்களா? வாழ்வாகிய நந்தவனத்தில் முதல் ரோஜா மலர் அது! பிறகு திருமணத்தின் பொழுது என்னைக் கோணற்பார்வையோடு பார்த் துக்கொண்டே நாணத்தினால் முகத்தைக் கவிழ்த்

துக்கொண்ட அந்தச் சாந்தா! அவள் முதுகில் உருண்ட அடர்த்தியான கூந்தலையும், வெட்கத்தினால் குனிந்து மறைந்திருந்த அவள் முகத்தையும் கண்டபோது, அமாவாசையன்று வெண்மதி தோன்றாதது பொருத்தந்தான் என்றே நான் நினைத்தேன். அதற்குப் பிறகு அவளுடைய எத்தனையோ உருவங்களைப் பார்த்திருக்கிறேன். பழகப் பழகப் பால் புளிக்கலாம். ஆனால் அழகைக் காணக் காண அலுப்பதில்லை. தாஜ்மகாலை எங்கிருந்து எப்போது பார்த்தாலும் அது அழகாகத்தான் இருக்கிறது. சாந்தாவும் எனக்கு அதுபோலத்தான் இருந்தாள். பல நிறமுள்ள கம்பள நூல்களை வைத்துக்கொண்டு பூவேலை செய்யும் சாந்தா என் மனக் கோயிலில் உறைந்துவிட்டதிலே வியப்பு என்ன இருக்கிறது? ரொட்டியைச் சுடும்போது தன் கையின் மென்மையை அதற்குக் கொடுக்கும் சாந்தாவும் அந்தக் கோயிலிலே இருந்ததுதான் ஆச்சரியம்.

இந்த வடிவங்கள் எல்லாவற்றையும் பார்த்ததும் என் மனம் கலங்கியது. இந்த வடிவங்கள்— வடிவங்களல்ல அவை. எப்பொழுதோ கண்ட அழகிய கனவுகள், எப்பொழுதோ கேட்ட இன்னிசைகள், எப்பொழுதோ நுகர்ந்த மணமலர்கள்! என்னிடம் அவற்றின் நினைவுகளைத் தவிர வேறு என்ன இருந்தது? இந்த நினைவுகளுங்கூட மறைந்துவிட்டால் எவ்வளவு நல்லது? நான் திடுக்கிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தேன். ஒரு பெரிய ஜமீன்தாரிடமிருந்து முதல் முதலில் எனக்கு அழைப்பு வந்தபோது, பையில் மருந்துகளை எடுத்து வைத்துக்கொண்டே அந்தப் பீரோவின் அருகில்தான் நான் சாந்தாவை

முத்தமிட்டேன். ஊர் முழுவதும் இன்புளுயன்சா பரவியிருந்தபோது எனக்கும் ஜுரம் தொற்றிக் கொண்டு நான் பிதற்றியபொழுது அவள் இந்தக் கட்டிலில்தான் என்னைத் தன் கண்ணீரால் அபிஷேகம் செய்தாள். உடல் எல்லாவற்றையும் மறந்து விடும்; ஆனால் கண்ணீரினால் நினைவுமலர்களை மலர வைப்பதில்தான் உள்ளத்துக்கு மகிழ்ச்சி.

தொப்பியை மேஜைமேல் எறிந்துவிட்டு, சாந்தாவின் படத்தைப் பார்த்துக்கொண்டே நான் சாய்வுநாற்காலியில் சாய்ந்தேன். சிறிது நேரத்துக்கெல்லாம்என்மனம் ஒரு நிலைக்கு வந்தது. உணர்ச்சி வசப்பட்ட என்னைக் கண்டு எனக்கே சிரிப்பு வந்தது. சாந்தா என்னுடையவளாக இருந்த வரைக்கும் நானும் அவளுடையவனாக இருந்தேன். அந்த அன்பினால் இப்பொழுது என்ன பயன்? சாந்தா சொர்க்கத்தில் இருக்கிறாள்; நான் மண்ணுலகில் இருக்கிறேன். சொர்க்கத்து அமுதத்தை நினைப்பதனாலே மண்ணுலகத்துப் பிச்சைக்காரனுடைய பசி கொஞ்சமாவது தணியுமா? என் வாழ்க்கை என்னும் நாடக மேடையில் சாந்தாவின் நாடகம் முடிந்தது; இனிமேல் காந்தாவின் நாடகம் தொடங்கப் போகிறது. இந்தப் புதிய நாடகத்தில் சாந்தா நுழைவதற்கு என்ன உரிமை இருக்கிறது?

மேஜை டிராயரிலிருந்து நான் காந்தாவின் படத்தை எடுத்தேன். கையிலே காந்தா, எதிரே சாந்தா. கையில் இருப்பவளை விட்டு, ஓடுகிறவளை-ஓடுகிறவளாவது, ஓடிப்போனவளைத் தொடர்வதிலே ஏதாவது அர்த்தம் உண்டா? காந்தாவின் படத்தை நான் கண்கொட்டாமல் பார்த்தேன். நாடி பார்ப்ப

தற்காக இரண்டு மாதங்களாக நான் பிடித்துவந்த இந்தக் கையை மணமேடையில் பிடிக்கும்போது-? இவ்வளவு நாளும் அவள் கண்கள் தெளிவாக இருந்தால் டாக்டர் என்ற முறையில் நான் மகிழ்வேன். இனி நாணத்தினால் அவை குவியும்போது எனக்கு எவ்வளவு ஆனந்தம் உண்டாகும்! தண்மையான தென்றலில் கடுங்கோடையை மறந்துவிடுவதுபோல, இந்த எண்ணங்களினால் சாந்தாவின் நினைவு மறைந்துவிட்டது. காந்தாவின் தகப்பனார் இன்று தான் அவளைப்பற்றி என்னிடம் பேசினார். நாளைக்குக் காலை ஏழு மணிக்கு நான் வழக்கம்போல அவள் உடல்நிலையைப் பார்க்கப் போகும்போது, அவர் என் எதிரே அவளுடைய ஆலோசனையைக் கேட்கப் போகிறார். நான் அங்கிருந்து புறப்பட்டதுமே அவர் இந்தப் படத்தையும் என்னிடம் மறக்காமல் கொடுத்தார். காந்தாவுக்கு நான் மருந்து கொடுத்துக் குணப்படுத்தியிருக்கலாம்; ஆனால் என்ன இருந்தாலும் என் மருந்து மனித அறிவினால் உண்டானதுதானே! அவளுடைய படத்திலே இருக்கும் சஞ்சீவியின் சக்தி என் மருந்திலே ஏது?

அந்தப் படத்தில் இருந்த கண்களின் ஒளி, என் மனத்தைக் கவிந்துகொண்ட அந்தகாரத்தை நீக்கியது. மணிக்கட்டில் இருந்த கடிகாரத்தை நான் பார்த்தேன். மேஜைமேலிருந்து தொப்பியை எடுத்துக்கொண்டே எனக்குள், 'சுபத்திரா கல்யாணம் இதற்குள் ஆரம்பித்திருக்குமே!' என்று சொல்லிக்கொண்டேன்.

நான் வாசலைத் தாண்டினேனோ இல்லையோ, தெருவில் ஓர் இளம் சந்நியாசி போவதைப் பார்த்

தேன். அவன் முகத்தை மேலாகத்தான் பார்த்தேன். அவனுடைய வேஷத்தைக் கண்டு என் சிந்தனைகள் புரண்டன. இந்த இளவயதில் இவன் ஏன் துறவு மேற்கொள்ள வேண்டும்? தான் காதலித்த பெண் வேறொருவனை மணந்துகொண்டதனால் இவனுக்கு இல்லறம் என்றாலே வெறுப்பு உண்டாகியிருக்குமோ? அல்லது மனைவி இறந்திருப்பாளோ?-சே, அது சாத்தியமன்று. மனைவியிடம் எவ்வளவு தான் அன்பு இருந்தாலும் அவளை எரித்த சாம்பலைப் பூசிக்கொண்டு எவனும் பைராகி ஆகிவிடுவதில்லை. உள்ளத்துக்கு அதிர்ச்சி ஏற்பட்டதனால் துறவை மேற்கொள்பவன் லட்சத்தில் ஒருவன் கூட இருக்கமாட்டான். இந்தத் துறவி எவனாக இருக்கலாம்? தாய் தந்தையரையும், உயிர்நண்பர்களையும் துறந்ததனாலே இவனுக்கு என்ன இன்பம் கிடைக்கும்? மனைவி—இவனுக்குப் பாவம், கல்யாணங்கூட ஆகியிருக்காது. முகத்தைப் பார்த்தால் விடிய விடிய வயது இருபத்தைந்து இராதுபோலத் தோன்றுகிறது. ஒருவேளை இவன் சோம்பேறியாகவும் இருக்கலாம். இந்தப் பம்பாயில் உலகத்திலுள்ள அத்தனை பொருள்களும் நிரம்பியிருக்கின்றன. துறவு என்பது இவனுடைய போலிவேஷமாக இருக்கலாம். 'சுபத்திரா கல்யாண்'த்திலே அர்ஜுனன் சந்நியாசம் எடுத்துக்கொள்ளவில்லையா?

அந்தத் துறவியைப் பற்றிச் சிந்தித்தவண்ணம் நான் நாடகக் கொட்டகைக்குப் போய்ச் சேர்ந்தேன். மானேஜர் என்னை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றார். முதல் வரிசையிலே காலியாக இருந்த மூன்றாம் நம்பர் நாற்காலியில் என்னை

உட்காரவைத்தார். நான் மேடையைப் பார்த்தேன். மகாஜனங்களின் ஏச்சுக்களை ஏற்றுக்கொண்டே அர்ஜுனன் தன் கதையைச் சொல்லிவந்தான். வழக்கமாக வரும் அர்ஜுனன், முதல் நாள் சாயங் தரம் எங்கோ ஓடிவிட்டமையால், வேறொருவன் அந்த வேஷம் போட்டிருந்தான். நேற்றுவரையில் நாம் தங்கையாக நினைத்திருந்த ஒருத்தி இன்று நம் மனைவியாகப் போகிருள் என்ற எண்ணத்தினலோ என்னவோ, அவன் நிலைகலங்கிப் போயிருந்தான். இந்த நாடகத்தில் அவன் சுபத்திரா ஹரணம் மட்டுமே செய்ய வேண்டியிருந்தது. அஞ்ஞாத வாசத் திலே இருந்து பிருகந்நளையாகி, விராடனுடைய குழந்தைகளுக்குப் பாட்டுக் கற்றுக்கொடுக்க வேண்டிய வேலை இந்த அர்ஜுனனுக்கு வந்திருந்தால், இவன் என்னதான் செய்வானே? அப்போது பாண்டவர்கள் மறுபடியும் பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒரு வருஷம் அஞ்ஞாத வாசமும் செய்தே தீரவேண்டியிருக்கும்!

அர்ஜுனனுடைய பாட்டைப்பற்றி நான் இப்படி நினைத்துக்கொண்டிருக்கையில், நாடகக் கம்பெனி மானேஜர் என்னிடம் வந்து காதோடு, "நான் உங்களை எழுந்திருக்கச் சொன்னல் உங்களுக்குக் கோபம் வராதே? மூன்றும் நம்பர் நாற்காலிக்கென்றே ஒருவர் வந்திருக்கிருர்!" என்ருர்.

"யாராவது பெரிய ஸேட்டா?"

"இல்லை, எவனே சாதாரண ஆசாமிதான். இப்போதுதான் ரெயிலில் வந்தானும். மூன்றும் நம்பர் நாற்காலியைத் தவிர வேறு எங்கும் உட்கார மாட்டேன் என்கிருன்."

"விந்தையான ஆள்தான்! ஒருவேளை குடித்து விட்டு வந்திருப்பானோ? இல்லாவிட்டால் நான் நாலாம் நம்பரில்கூட உட்கார முடியாதே!"

"மூன்றும் நம்பர் நாற்காலிக்கு அவன் பத்து ரூபாய் கொடுக்கத் தயாராக இருக்கிறான்."

அன்னசத்திரத்தில் உண்பவன் ஊறுகாய் கேட்கலாமா? அதுபோல இனமாக நாடகம் பார்க்கிறவன் இன்ன நாற்காலிதான் வேண்டும் என்று எப்படிப் பிடிவாதம் பிடிப்பது? மானேஜர் மூன்றும் நம்பர் நாற்காலிக்காரனை அழைத்து வரப்போனார். நான் அடுத்த நம்பரில் உட்கார்ந்தேன். மானேஜரோடு வந்தவனை நான் ஆவலோடு பார்த்தேன். சற்று முன்பு தெருவிலே கண்ட துறவியைப் போலவே இருந்தது அவன் முகம். ஆனால் அது வெறும் தோற்றந்தான். துறவி எதற்காகத் தன் வேஷத்தை மாற்றிக்கொண்டு நாடகக் கொட்டகைக்கு வரப்போகிறான்? நாடகத்து அர்ஜுனனுக்குத் துறவு வேஷத்தினாலே சுபத்திரை கிடைத்தாற் போல, எவனாவது ஒரு துறவி இல்லற வேஷம் போட்டதனாலே அவனுக்கு மனைவி கிடைத்து விடுவாளா என்ன?

நாரதருடைய பஜனை, கடோற்கசனுடைய கர்ஜனை, சுபத்திரையின் புலம்பல் இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டே நான் இடையிடையில் என் பக்கத்தில் இருந்தவனைக் கவனிக்கலானேன். மூன்றும் நம்பர் நாற்காலியில் அவனுக்கு ஏன் இவ்வளவு அன்பு என்பது எனக்கு விளங்கவில்லை. ஒளி வீசிய அவன் கண்களையும், வீரத்தையும் உறுதியையும் காண்பிக்கும் உதடுகளையும் கண்டு எவனுமே

அவனைப்பற்றி நல்ல அபிப்... ...ான். ஆனால் அவன் எதற்காக மூன்றும் நம்பர் நாற்காலியில் உட்காரப் பிடிவாதம் பிடிக்கவேண்டும்?

நான் தன்னைக் கவனித்ததை அவன் தெரிந்துகொண்டான். காட்சி முடிந்ததும் திரை விழுந்த போது, 'எனக்காக நீங்கள் இந்த நாற்காலியிலிருந்து எழுந்திருக்க வேண்டியிருந்தது; என்னை மன்னிக்க வேண்டும்'' என்றான்.

ஏதாவது பதில் சொல்ல வேண்டுமே என்பதற்காக, "சேச்சே! இது என்ன பிரமாதம்? உங்கள் நாற்காலிக்கும் என் நாற்காலிக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது?" என்றேன்.

"வித்தியாசம் இராவிட்டால் நான் மூன்றும் நம்பர் நாற்காலிக்காக அடம் பிடித்திருப்பேனா?" என்று சொல்லி அவன் ஒரு கணம் அமைதியாக இருந்தான். பிறகு என் பக்கமாகத் திரும்பி, "எனக்குப் பிரியமான ஒருத்தியைக் கடைசியாக இந்த நாற்காலியில்தான் சந்தித்தேன். இதில் உட்காருவதால் அவளை மீண்டும் பார்ப்பதுபோன்ற ஆனந்தம் எனக்கு உண்டாகிறது" என்றான்.

காதற்பித்துப் பிடித்தவர்கள் நாடகத்திலேதான் வருவார்கள் என்று நான் எண்ணியிருந்தேன். அர்ஜுனனுடைய வேஷத்தைக் கண்டு அவனுக்குக் காதற்சுவையே தெரியாது என்று தீர்மானித்த சுபத்திரையையும், ரத்தின மாலையை வைத்துக் கொண்டு அவள் பெயரையே ஜபித்த அர்ஜுனனையும் நான் காவியத்திலே கண்டிருந்தேன். என் பக்கத்தில் இருந்தவன் அவர்களைத் தோற்கடித்துவிடுவான்போல இருந்தது. இந்த நாற்காலியில் இத்தனை

நாளைக்குள் இவன் ஜன்மத்திலேயே பார்க்காத எத்தனையோ பேர் உட்கார்ந்து போயிருப்பார்கள். சூரியன் அஸ்தமித்த பிறகும் அவனுடைய பிரகாசம் மிஞ்சியிருப்பதுபோல, நாற்காலியிலிருந்து ஒருவன் எழுந்துபோன பிறகும் அவனுடைய அன்பு ஸ்பரிசம் மிஞ்சியிருக்குமா என்ன?

என் மனம் நாடகத்தில் செல்லவில்லை; அவனுடைய வாழ்க்கையைப் பற்றியே சிந்திக்கலாயிற்று. இந்த இளம் அறிவாளிக்கு இந்த மூன்றும் நம்பர் பைத்தியம் எங்கிருந்து வந்ததோ? காட்சிகள் பல சென்றன. என் கேள்விக்குப் பதில் மட்டும் கிடைக்கவில்லை. வெறும் அறிமுகத்தைக் கொண்டு அவனுடைய வரலாற்றைக் கேட்பது நாகரிகமன்று. நான்காவது அங்கம் முடிந்தது. இன்னும் ஓர் அங்கம் முடிந்தவுடனே அவனும் நானும் பிரியப் போகிறோம். என் மனம் ஏனோ துடித்தது.

திரை விழுந்ததுமே அவன் என்னைப் பார்த்து, "என்ன, டாக்டர்!" என்றான். சட்டைக்கு வெளிப் பையிலே தலை நீட்டிய ஸ்டெதாஸ் கோப்பைப் பார்த்துத்தான் அவன் அப்படிக் கூப்பிட்டிருக்க வேண்டும். ஆனால் அவன் என்னோடு நீண்ட நாள் பழகியவனைப்போல அப்படிக் கூப்பிட்டதும் நான் திடுக்கிட்டேன்.

"டாக்டர், அர்ஜுனன் பெரிய வீரன் என்று உங்களுக்குத் தோன்றுகிறதா?"

"தோன்றாமல் வேறு என்ன செய்யும்! அவனைப் பயங்கொள்ளி என்று சொன்னால் அவன் நம்மேல் மானநஷ்ட வழக்குப் போடுவான். மகாபாரதம் முழுவதும் அவனுக்குச் சாட்சி சொல்ல வரும்!"

"நாம் அவனுக்கு எதிராகச் சுபத்திரையைச் சாட்சியாக நிறுத்துவோம். அர்ஜுனன் பெரிய வீரன் என்றால், ருக்மிணியைப் பார்த்தவுடனே ஏன் பயந்து நடுங்கினன்?"

"ருக்மிணியோடு சண்டை போடுவதற்கா அவன் வந்தான்? அவனுடைய துறவி வேடம் போலி யானது என்பது அவளுக்குத் தெரியும். அதனுல் அவன் நடுங்கினன்."

என் பேச்சு முடிவதற்குள்ளே, கம்பெனி மானேஜர் ஒரு போலீஸ் அதிகாரியோடு உள்ளே வந்தார். அவர் தற்செயலாக வந்திருப்பார் என்று நான் நினைத்தேன். என் பக்கத்தில் இருந்தவன் வாசற்புறமாக முதுகைத் திருப்பி உட்கார்ந்திருந் தான். போலீஸ் அதிகாரி எங்களிடம் வந்து, மூன் றும் நம்பர் நாற்காலியில் இருந்தவனுடைய கையைப் பிடித்தார். அவன் சட்டென்று திரும்பிப் பார்த் தான். அவன் முகத்தில் முறுவல் தோன்றியது.

"நான் ஐந்தாவது அங்கத்தைப் பார்ப்பதில் போலீஸாருக்கு விருப்பம் இல்லை போலிருக்கிறது! மூன்றும் நம்பர் நாற்காலியில் இனி நீங்கள் வேண்டு மானுல் உட்காரலாம். போலி வேஷம் போட்டால் மனிதன் பயப்பட வேண்டியதுதானே? எங்கே, என் நாடியைப் பாருங்கள்" என்றுன் அந்த ஆசாமி.

அவனுடைய நாடி மிகவும் அமைதியாக இருந் தது. "அர்ஜுனன் உண்மையிலே பயங்கொள்ளி தான்" என்று நான் சொன்னேன்.

அவன் எனக்கு வணக்கம் செலுத்திவிட்டு அந் தப் போலீஸ் அதிகாரியோடு போய்விட்டான். அவனை ஏன் பிடித்தார்கள் என்பது மானேஜருக்

கும் தெரியவில்லை. அவன் திருடனாக இருப்பான் என்று எனக்குத் தோன்றவில்லை. அடுத்த காட்சியை நான் பார்க்கலானேன்; ஆனால் மூன்றாம் நம்பர் நாற்காலி காலியாக இருந்தும் அதில் நான் உட்காரவில்லை.

வீட்டுக்குப் போய் நான் படுக்கையில் படுத்த போது எதிரே மேஜையில் மின்சார ஒளியில் சாந்தா வின் படம் என் கண்ணில் பட்டது. அவள் சிரிப்ப தாக எனக்குத் தோற்றியது. அவள் ஏன் சிரிக்க வேண்டும்? நான் அவளை மறந்து காந்தாவைத் தியா னிப்பதனாலா? நான் படத்தின் அருகில் போய்ப் பார்த்தேன். சாந்தா எப்பொழுதும் போலச் சாந்த மாகத்தான் இருந்தாள். விளக்கு வெளிச்சத்தில் அவள் சிரிப்பதாக நான் கண்டது வெறும் தோற் றந்தான்.

படுக்கையில் படுத்த பிறகும் எனக்குத் தூக்கம் வரவில்லை. மூன்றாம் நம்பர் நாற்காலியும் அதில் வந்து அமர்ந்த காதற்பித்தனும் என் கண்ணை விட்டு நீங்கவில்லை. போலீசார் அவனை ஏன் பிடித் தார்கள்? ஒரு காலத்தில் தன் காதலி உட்கார்ந்த நாற்காலியில் அமர்ந்ததனால் அவன் எவ்வளவு ஆனந்தமாக இருந்தான்! அவனுடைய காதல் கட லைப்போன்ற ஆழமுடையதாக இருந்ததனால்தான் இத்தகைய உணர்ச்சியாகிய ரத்தினம் தோன்றி யது. சாந்தாவிடம் எனக்கு இருக்கும் அன்பு-தேக்கி வைத்த குளத்தைப்போல. தண்ணீர் வடிந்தது; அதில் இருந்த தாமரைகள் வாடின.

நான் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாகப் பல தடவை புரண்டேன். கடிகாரம் என்னதான்

ஓயாமல் ஓடினாலும் உள்ளத்தின் தவிப்பை அதனால் தணிக்க முடியுமா? எங்கே பார்த்தாலும் சாந்தாவின் ராஜ்யமே என் கண்ணுக்குப் புலப்பட்டது. வட்ட மேஜையிலே பரப்பிய அந்த வலைத்துணி; நிலைக்கண்ணாடிக்கு எதிரே மணிகள் கோத்துத் தொங்கும் அழகிய மயில்; அவ்வளவென்ன, என் கால்மாட்டில் இருக்கும் துப்பட்டி! அவளுடைய மென்மையான கை இதை எவ்வளவு தரம் தொட்டிருக்கும்! துப்பட்டி; மூன்றும் நம்பர் நாற்காலி! என் உள்ளத்தில் தீ மூண்டது. நான் அவளுடைய படத்தை எடுத்துக் கையிலே வைத்துக்கொண்டு வெகு நேரம் பார்த்தேன். அப்பொழுதுதான் எனக்குத் தூக்கம் வரும் அளவுக்கு அமைதி உண்டாயிற்று.

கண்கள் மூடிக்கொண்டாலும் உள்ளத்தின் இமைகளை யார் மூட முடியும்? அவை தூக்கத்திலுங் கூட விழித்திருந்து, கடந்த காட்சிகளையும் வரப் போகிற காட்சிகளையும் பார்த்துக்கொண்டிருந்தன. நித்திரை என்பது காவியத் தெய்வம். அதன் அருள் பெற்றவன் கற்பனைச் சிறகு கொண்டு பறப்பான். காந்தாவிடம் எனக்கு இருந்த ஆசையும், நாடகக் கொட்டகையில் கண்ட இளைஞனும் என் கற்பனைச் சிறகை வானத்திலே பறக்கவிட்டார்கள். அந்த இளைஞன் ஒரு கனவிலே எனக்கு அர்ஜுனனாகத் தோன்றினான். அவனுடைய சுபத்திரை எவளாக இருப்பாள் என்று நான் நினைப்பதற்குள், போலீசார் அவனைப் பிடித்துச் சென்று தூக்கில் இடுகிறார்கள். தூக்கில் இடுவதற்கு முன் அவனுடைய முகம், நாடகத்தில் அர்ஜுனனாக நடித்தானே, அவனுடைய முகம்போல இருந்தது.

இந்த இந்திர ஜாலத்திலிருந்து நான் விழித்து எழுவதற்குள் காலை மணி எட்டு ஆகிவிட்டது. காந்தாவின் தந்தையிடம் நான் ஏழு மணிக்கு வருவதாகச் சொல்லியிருந்தேன். பரீட்சை ஹாலுக்கு நேரங் கழித்துச் செல்லும் மாணவனைப் போல என் உள்ளத்தில் ஏமாற்றம் நிரம்பியது. க்ஷவரம் செய்து கொண்டு, டீ குடித்துவிட்டு நான் அவசரமாகக் காந்தாவின் வீட்டுக்குப் போனேன். அவள் தந்தை என் வரவைத்தான் எதிர்பார்த்திருந்தார்.

"வேறு எங்காவது போயிருந்தீர்களோ?" என்று அவர் கேட்டார்.

"ஆமாம்." ஒரு பொய் சொல்வது எவ்வளவு சுலபம்! சந்தர்ப்பம் வந்தால், 'நான் விடிகாலையில் ஒரு லட்சாதிபதி வியாபாரியின் வீட்டுக்குப் போயிருந்தேன்; அதனால் வர நேரமாகிவிட்டது' என்று சொல்லவும் தயாராக இருந்தேன்.

"இன்று காலையில் நிச்சயித்துவிடலாம் என்று நான் நேற்றுச் சொன்னேன்; ஆனால்—" என்று அவர் இழுத்தார்.

நம்பிக்கையைக் குலைக்கும் அந்தக் கடைசிச் சொல்லைக் கேட்டதும் என் உள்ளம் நடுங்கியது. இந்த 'ஆனலி'ன் பின்னால் என்ன ரகசியம் பதுங்கியிருக்குமோ?

"இன்று எல்லாமே ஜோராக நடந்திருக்கும். ஆனால் காலையில் தினசரிப் பத்திரிகை வந்ததும் எல்லாமே மாறிவிட்டது."

அவர் பேசியது எனக்கு விளங்கவில்லை. "தெளிவாகச் சொல்லுங்கள்" என்றேன்.

"காலையில் பத்திரிகை வந்து. எவனையோ

நேற்றிரவு நாடகக் கொட்டகையில் கைது செய்த விவரம் அதில் இருக்கிறது!"

முதல் நாள் இரவு நடந்த நிகழ்ச்சி என் கண் முன் நின்றது. "அதற்கும் காந்தாவுக்கும் என்ன சம்பந்தம்?" என்று நான் வியப்போடு கேட்டேன்.

"என்ன சம்பந்தம் என்பது அவளுக்குத்தான் தெரியும். எனக்கு மாத்திரம் ஒரு சந்தேகம். உங்களிடம் மருந்துவாங்க முதலில் வந்தபோதே சொல்லியிருக்கிறேனே!"

"இருக்கலாம்;எனக்குச் சரியாக ஞாபகமில்லை."

"இவள் இங்கே காலேஜில் படித்தாள்.இவளுக்கும் ஒரு பையனுக்கும் நட்பு ஏற்பட்டது. அவனோடு இவள் ஒரு நாள் இரவு நாடகம் பார்க்கப் போனாள். இந்தச் செய்தி தெரிந்ததும் நான் இங்கே வந்து இவளை ஊருக்கு அழைத்துப் போனேன்.ஊருக்குப் போனதும் இவள் படுத்த படுக்கையாகிவிட்டாள்."

"இப்போது எனக்குப் புரிகிறது!" என்றேன்.

"அந்தப் பத்திரிகையைப் பார்த்ததுமே இவள் அழ ஆரம்பித்தாள். நாலு நாள் போனால் எல்லாம் சரியாகிவிடும். நான் உள்ளே வரவில்லை. நீங்களே உள்ளே போய்ப் பாருங்கள்."

சாய்வுநாற்காலியில் படுத்திருந்த காந்தா என்னைப் பார்த்ததுமே எழுந்து உட்கார்ந்தாள். அவள் கையில் அந்தப் பத்திரிகை இருந்தது. நான் நாற்காலியில் உட்கார்ந்தபடியே அந்தப் பத்திரிகையை வாங்கிப் பார்த்தேன். முதல் பக்கத்திலேயே, "நாடகக் கொட்டகையில் கைது!" என்று கொட்டையான எழுத்தில் அச்சிட்டிருந்தது. நடுவில் இருந்த படத்தைப் பார்த்தேன். மூன்றும் நம்பர்

நாற்காலியில் உட்கார்ந்த அதே இளைஞன்தான்! ஆவல், வியப்பு, அச்சம் எல்லாம் கலந்த உணர்ச்சியோடு நான் மேலே படித்தேன்:

"கடந்த ஆறு மாதங்களாகப் போலீசார் கண்ணில் விளக்கெண்ணெயை விட்டுக்கொண்டு தேடி வந்த குற்றவாளி, நேற்றிரவு நாடகக் கொட்டகையில் பிடிபட்டான். குற்றவாளியின் பெயர் சந்திரகாந்தன். டில்லிச் சதியாலோசனையில் அவன் முக்கியமாகச் சம்பந்தப்பட்டவன் என்று போலீசார் அவன்மீது குற்றம் சாட்டியிருக்கிறார்கள். அவன் நேற்றுத்தான் பம்பாய்க்கு வந்தான். முதலில் அவன் துறவி வேஷத்தில் திரிந்துகொண்டிருந்தான். குஜராத்தி வியாபாரியாக வேஷம் போட்டுக்கொண்டு வந்த ஒரு போலீஸ் அதிகாரி, 'சாமியாரே, நீங்கள் பம்பாயில் என்ன செய்கிறீர்கள்?' என்று அவனைக் கேட்டார். 'என் தெய்வம் இங்கே வந்திருக்கிறது; அதைத் தேடுகிறேன்' என்று அவன் பதில் சொன்னான். இரவு அவனுக்கு என்ன தோன்றியதோ என்னவோ, துறவி வேஷத்தைக் களைந்து, சாதாரண இல்லறத்தானைப்போல நாடகக் கொட்டகைக்குப் போனான். அங்கே மூன்றாம் நம்பர் நாற்காலியில் உட்கார வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தான்."

"மூன்றாம் நம்பர் நாற்காலியா!" என்று காந்தா தழுதழுத்த குரலில் கேட்டாள்.

"இந்தத் தகவல் அத்தனையும் உண்மை. நேற்று இரவு நான் நாலாம் நம்பர் நாற்காலியில் உட்கார்ந்திருந்தேன்."

காந்தா கண்ணைத் துடைத்துக்கொண்டு, "அவர்

உங்களோடு ஏதாவது பேசினாரா?" என்றாள்.

"நிறைய! மூன்றும் நம்பர் நாற்காலியில்தான் நான் முதலில் உட்கார்ந்திருந்தேன். அப்போது இந்த ஆசாமி வரவே, நான் நாலாம் நம்பரில் உட்கார வேண்டியதாயிற்று. அந்தக் காட்சி முடிந்ததும் அவன் என்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். 'எனக்குப் பிரியமான ஒருத்தியை நான் கடைசியில் இந்த நாற்காலியில்தான் பார்த்தேன்' என்று அவன் சொன்னது இப்போதும் என் காதில் ஒலிக்கிறது."

காந்தா அழலானாள். அவளை என்னால் பார்க்கவே முடியவில்லை. ஆனால் வானத்திலிருந்து கொட்டும் மழையை யாரால் தடுக்க முடியும்? சந்திரகாந்தனைப் பற்றிய செய்தியை நான் படிக்கலானேன். போலீசார் அவனை டில்லிக்கு அழைத்துப் போனார்கள்.

காந்தா சிறிது நேரம் கழித்து அமைதியாக, "இன்று பிற்பகலில் நாம் நாடகம் பார்க்கப் போகலாம்" என்றாள்.

நான் மகிழ்ச்சியோடு தலையை ஆட்டினேன்.

"எனக்கு அந்த மூன்றும் நம்பர் நாற்காலிதான் வேண்டும்!" என்று, சந்திரகாந்தனுடைய படத்தைப் பார்த்துக்கொண்டே அவள் சொன்னாள்.

நாங்கள் இருவரும் நாடகம் பார்க்கப் போவது தெரிந்ததும் காந்தாவின் தந்தைக்கு எல்லையற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. "நாலு நாளாவது ஆகும் சரிப்படுவதற்கு என்று நினைத்தேன். நாலு மணி நேரங்கூட ஆகவில்லை. இளம்பிராயமே இப்படித்

தான்!'' என்ருர்.

அந்த மகிழ்ச்சியிலேயே அவர் எனக்குப் புத்தி மதியும் சொன்னர்.

"உங்கள் வயதைக் கேட்டால் இரண்டுவருஷம் குறைவாகவே சொல்லுங்கள். உங்கள் மனைவி இறந்தபோதிலும் முதல் கல்யாணத்து வயதுதான் உங்களுக்கு ஆகிறது. இந்தக் காலத்துப் பெண்க ளிடம் நாம் ஜாக்கிரதையாகவே இருப்பது நல்லது'' என்ருர்.

கம்பெனி மானேஜரிடம் நான் எங்களுக்காக அந்த இரண்டு நாற்காலிகளைக் காலியாக வைக்கச் சொன்னபோது அவர் சிரித்துவிட்டார். "மூன்ரும் நம்பர் நாற்காலியில் உட்காருகிறவர்களைப் போலீ சார் பிடித்துச் செல்வார்கள்!'' என்ருர்.

"பார்க்கலாம்!'' என்றேன்.

மூன்ரும் நம்பர் நாற்காலியில் காந்தா உட் கார்ந்திருந்தாள். அவளுடைய கவனம் நாடகத்தில் இல்லை; உள்ளமாகிய மேடையில் நடக்கும் நாடகத் திலேயே அவள் மூழ்கியிருந்தாள். அவள் கண்ணில் நீர் துளும்புவதையும் நான்பார்த்தேன். காலேஜுக் குப் போகும் சந்திரகாந்தனும் காந்தாவும் என் கண்ணுக்குத் தோன்றினர்கள். சந்திரகாந்த னுடைய உள்ளத்தில் காதலாகிய வெண்மதி தோன்றும்போதே தேசபக்தியாகிய கதிரவனும் உதித்தான். கதிரவனுக்கு முன்னல் வெண்மதி மங்கியது. அவர்கள் இருவரும் கடைசியாக நாடகக் கொட்டகையில் சந்தித்தார்கள். நாடகம் பார்க்க இருவருமே வந்திருப்பார்கள். காந்தா இப்போது போலவே மூன்ரும் நம்பர் நாற்காலியில் உட்கார்ந்

திருப்பாள். அவன் நாலாம் நம்பரிலோ இரண்டாம் நம்பரிலோ உட்கார்ந்திருப்பான். அந்த நிலையில் அவன் அவளிடம் விடை பெற்றிருக்க வேண்டும்.

ஆனால் அப்படி நாடகக் கொட்டகையிலே விடை பெறும்படியாக அவனுக்கு என்ன அவசரம் வந்துவிட்டது? என்னதான் தலையைச் சொறிந்தும் எனக்குக் காரணம் தெரியவில்லை. அவ்வளவு தெரிந்தால் நான் டாக்டராக இருப்பதோடு நாவலாசிரியனும் ஆகிவிடுவேனே!

நான் தற்செயலாகத் திரும்பிப் பார்த்தேன். மூன்றும் நம்பர் நாற்காலி! அந்த நாற்காலியில் உட்கார்ந்துதான் நேற்றுச் சந்திரகாந்தான் தன் உயிரையே ஆபத்துக்கு உள்ளாக்கினான். காந்தா உட்கார்ந்த நாற்காலியில் தான் உட்கார வேண்டும் என்பது அவனுடைய ஆசை. நானோ நான்கு வருஷங்கள் சாந்தாவுடன் இனிமையாக வாழ்ந்தும் அவளை மறந்துவிட்டேன். மனிதர்கள் போய்விடலாம்; ஆனால் அன்பு போய்விடுமா? மனிதர்கள் இறந்தாலும் அன்பு இறந்துவிடுமா?

இரண்டாவது அங்கம் முடிந்ததும் காந்தா உலாவப் போகவேண்டும் என்றாள். நாங்கள் மலபார் ஹில்லுக்குப் போனோம். அங்கே பசுந்தரையில் அவள் நீண்டநேரம் அமைதியாக உட்கார்ந்திருந்தாள். அவளிடம் என்ன பேசுவதென்றே எனக்குத் தோன்றவில்லை.

கடைசியில் அவளே அடைத்த குரலில் பேசினாள்: "அன்று இரவு நாங்கள் இருவரும் இப்படித்தான் நாடகம் பார்க்கப் போயிருந்தோம். மூன்றும் அங்கம் முடிந்ததும் அவரை யாரோ வெளியே கூப்

பிட்டார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் உள்ளே வந்து என்னிடம், 'நான் இப்பொழுதே டில்லிக்குப் போகவேண்டும்' என்றார். 'யாருக்காவது உடம்பு சரியில்லையா?' என்று கேட்டேன். 'அம்மாவுக்கு உடம்பு சரியில்லை; தந்தி வந்திருக்கிறது!' என்றார். 'உங்கள் தாய் டில்லியிலே எங்கே இருக்கிறாள்?' என்று கேட்டேன். 'என் அம்மா மட்டுமல்ல; உனக்கும் அம்மா; எல்லாருக்கும் அம்மா!' என்றார். அவர் பேச்சு எனக்கு விளங்கவில்லை. அவர் அவசர அவசரமாக, 'நாடகம் முடியும்வரைக்கும் நீ இங்கிருந்து அசையாதே. யாராவது என்னைக் கவனிக்கலாம். நாம் இருவரும் ஒன்றாக வந்ததனால், நீ இங்கே இருந்தால் யாருக்கும் நான் போய்விட்டதாகச் சந்தேகம் வராது!' என்றார். 'திரும்ப எப்போது வருவீர்கள்?' என்று துணிச்சலோடு கேட்டேன். 'திரும்பவா? திரும்பவே முடியாத இடத்துக்கு ஒருவேளை போகவேண்டி யிருக்கலாம்!' என்றார். என் கண்ணீரைக் கண்டதும், 'பம்பாய்க்கு மறுபடி வந்ததுமே உன்னைச் சந்திப்பேன். நீ உட்கார்ந்திருக்கும் மூன்றாம் நம்பர் நாற்காலியே சாட்சி' என்றார். அதுதான் அவர் என்னிடம் சொன்ன கடைசிப் பேச்சு."

இவ்வளவு நேரமும் அடக்கி வைத்திருந்த கண்ணீர் வெள்ளமாகப் பெருகியது. எனக்கும் துயரம் தாங்கவில்லை. தாயின் மடியில் இறக்கும் தறுவாயில் விக்கும் குழந்தைகளை நான் டாக்டர் தொழிலில் பார்த்திருக்கிறேன். காந்தாவை இப்போது பார்க்கும்போது அதுபோன்ற துயரமே எனக்கு உண்டாயிற்று.

அவள் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, "டாக்டர், நீங்கள் எவ்வளவோ சிரமப்பட்டு என்னைக் குணப்படுத்தினீர்கள். நோயாளியின் இருதயத்தைப் பார்க்கும் உரிமை டாக்டருக்கு உண்டு. அதனுல்தான்— ஆனுல் அப்பாவிடம் இதையெல்லாம் யார் சொல்வது? என் உடல்நிலை சற்றுச் சரியானதுமே அவர் கல்யாணத்தைப் பற்றிப் பேசுகிருர். என் கல்யாணம்— அந்த மூன்ரும் நம்பர் நாற்காலியை அப்பாவுக்குக் காண்பித்தால், 'இது போல் எத்தனையோ நாற்காலிகள் இருக்கின்றன!' என்பார். ஆனுல் அது எனக்குக் கல்யாண மேடையாகத் தோன்றுகிறது" என்ருள்.

திரும்பி வரும்போது நான் அவளை என் வீட்டுக்கு அழைத்து வந்தேன். சாந்தாவின் படத்தை அவளுக்குக் காண்பித்தேன். அதை உற்றுப் பார்த்த அவள், "டாக்டர், நீங்கள் பாக்கியசாலியாக இருந்தீர்கள்— அல்ல, இருக்கிறீர்கள்" என்ருள்.

மறுநாள் அவள் தந்தை என்னிடம், "காந்தா இரவு முழுவதும் ஆனந்தமாக இருந்தாள். நாடகம் அவள் மனத்தை மாற்றியிருக்கிறது. அவள் நர்ஸாகப் போகிருளாம். சரியான யோசனை. இல்லறத் தேரின் ஒரு சக்கரம் டாக்டராக இருக்கும்போது மற்ருெரு சக்கரம் நர்ஸாக இருப்பதுதான் பொருத்தம்!" என்ருர்.

அந்தப் பைத்தியக்காரக் கிழவரை எப்படிச் சமாதானப்படுத்துவது? நான் பேசாமல் போய் விட்டேன்.

மூன்ரும் நாள் நான் காந்தாவின் உடல்நிலையைப் பரிசோதித்துவிட்டுப் புறப்பட்டேன். என்

கையில் ஒரு மல்லிகை மாலை இருந்தது. கிழவர் கண்ணுக்கு அது புலப்படாமலா இருக்கும்? "பேஷ்! மாலை வரைக்கும் விஷயம் வளர்ந்துவிட்டதா? இந்தப் பெண்தான் எவ்வளவு அழுத்தம்! என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லையே?" என்றார்.

அவருடைய பிரமையை நீக்குவது இப்பொழுது அவசியமாக இருந்தது. நான் அவரை என்னோடு வீட்டுக்கு அழைத்து வந்தேன்.

காந்தா கொடுத்த மல்லிகை மாலையைச் சாந்தாவின் படத்துக்குப் போட்டு, "இவள் என் மனைவி சாந்தா!" என்றேன்.

அவர் தலையை ஆட்டிக்கொண்டே, "சரியான ஜோடியாகத்தான் இருக்கிறது. இருக்கிறதாவது? இருந்தது. ஜோடியில் ஒன்று போய்விட்டால் மற்றொன்று இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒன்றுதான்! காலில் ஒற்றைச் செருப்பை மாட்டிக் கொண்டு உலகத்திலே யாராவது நடக்கமுடியுமா?" என்றார்.

அவருடைய இந்தக் காவியப் பேச்சைக் கேட்டு எனக்குச் சிரிப்பதா அழுவதா என்றே தெரியவில்லை. நான் மென்மையான குரலில, "காந்தாவை நான் மணக்க முடியும் என்று தோன்றவில்லை!" என்றேன்.

"ஏன் அப்படி?"

"என் முதல் மனைவி உயிரோடு இருக்கிறாள்."

"உயிரோடு இருக்கிறாளா? எங்கே?"

"இங்கே!" என்று என் இருதயத்தைச் சுட்டிக் காட்டினேன்.

"நீங்கள் உயிரோடு இருக்கிறீர்களா இல்லையா

என்பதுதான் அங்கே தெரியும்!'' என்று அவர் சினத்தோடு சொன்னார்.

''நான் உயிரோடு இருப்பதனால்தான் சாந்தாவும் உயிரோடு இருக்கிறாள்!''

அவர் ஏமாற்றத்தோடு இங்குமங்கும் பார்த்தார். சாந்தாவின் படத்துக்கு எதிரே இருந்த சாய்வு நாற்காலியைப் பார்த்த அவர், ''இதில் ஏன், மூன்று என்ற எண் போட்டிருக்கிறது? மற்ற நாற்காலிகளில் எவ்வித எண்ணும் இல்லையே!'' என்றார்.

''அந்த எண்ணைப் போட்டவள் அவள்தான்'' என்று நான் அந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டே சொன்னேன்.

# நந்தவனம்

[பூஞ்சோலையிலே நிறம் நிறமான பல மலர்கள் கண்ணையும் கருத்தையும் கவரும். இந்த உருவகக் கதைகள் உருவில் சிறியனவாயினும் என்றும் நிலைத்திருக்கும் இலக்கிய மணிகள்; ஆதலால் இந்த நந்தவனத்தில் எப்பொழுதும் மங்காத மகிழ்ச்சியைப் பெறலாம்.]

## 1

### அடிவானம்

பூமியும் வானமும்!

இரண்டும் அழகானவை. ஆனால் இரண்டுக்கும் எவ்வளவு தூரம்!

கவியின் கற்பனைக்கு இந்தத் தொலைவு வருத்தத்தைத் தந்தது. எங்காவது ஓர் இடத்தில் பூமியும் வானமும் சந்தித்திருக்கும் என்று அவனுக்குத் தோன்றிற்று. அவன் பூமி முழுவதையும் சுற்றி வந்தான். ஆனால் அந்த இனிய காட்சி அவனுக்குப் புலப்படவில்லை.

அவன் தன் கற்பனையினால் அடிவானத்தைத் தோற்றுவித்தான். பூமியும் வானமும் சந்திப்பதாக அந்த ரேகையை அவன் சுட்டிக் காட்டினான். அவனுடைய கற்பனைவன்மையைக் கண்டு பலர் வியந்தார்கள்.

ஆனால் ஒரு தோட்டக்காரனுடைய மழுங்கிய மூளைக்கு இது எட்டவில்லை. 'பூமியும் வானமும் சந்திக்கும் இடத்துக்கு நாம் இருவரும் போய்ப் பார்ப்போம்' என்று அவன் கவியை அழைத்தான்.

'தொலைவிலிருந்துதான் அதைப் பார்க்க வேண்டும்' என்றான் கவி.

தோட்டக்காரன், 'பூமியும் வானமும் சந்திக்கும் இடத்தை நான் பிரத்தியட்சமாகக் காட்டுகிறேன்' என்று சொன்னதும், கவிக்கு நவ ரசங்களும் வறண்டுவிட்டன. அவனுடைய பேச்சே கவிக்கு விளங்கவில்லை.

தோட்டக்காரன் கவியைத் தன் தோட்டத்துக்கு அழைத்துப் போய் ஒரு மாமரத்தின் நிழலில் நிற்க வைத்தான். மரத்தில் அழகாகப் பழுத்திருந்த ஒரு பழத்தை அவன் சுட்டிக் காட்டினான்.

கவி ஒரு கணம் திகைத்தான். மறுகணம், தோட்டக்காரன் சொன்னது சரி என்றே அவனுக்குப் பட்டது. பூமியும் வானமும் சந்தித்ததன் பயனாகத்தானே இந்த இனிய பழம் உண்டாகியிருக்கிறது!

## 2

### புது யுகம்

முன் காலத்து முனிவர்களுக்கு உற்சாகம் பிறந்தது. இறைவனுடைய வடிவத்தைக் காண அவர்களின் அறிவு முயன்றது. வேதங்கள் பிறந்தன. ஆண்டவனைப்பற்றி 'இது அல்ல, அது அல்ல' என்ற அறிவுமட்டுமே அவர்கட்கு உண்டாயிற்று.

'உண்மையான தத்துவ ஞானம் இதுதான்!' என்று மக்கள் வியந்தனர்.

இடைக்காலத்துப் பெரியவர்களுக்கு உற்சாகம் பிறந்தது. இறைவனுடைய வடிவத்தைக் காண அவர்கள் பிரதிக்ஞை செய்துகொண்டார்கள்,

அப்புறம் கேட்க வேண்டுமா? கல் தெய்வமாயிற்று; குரங்கு தெய்வமாயிற்று. ஆண்டவன் நீரிலும் தரையிலும் மரத்திலும் கல்லிலும் இருப்பதாக அவர்கள் அறிந்தார்கள்.

'உண்மையான பக்தி இதுதான்!' என்று மக்கள் மகிழ்ச்சியோடு கூவினார்கள்.

விஞ்ஞான யுகம் வந்தது. விஞ்ஞானிகளுக்கு உற்சாகம் பிறந்தது. கல்லிலிருந்து குரங்குவரைக்கும் எல்லாப்பொருள்களின் வாழ்க்கையையும் அவர்கள் ஆராய்ந்தார்கள். எந்தப் பொருளிலும் எங்கும் அவர்களுக்கு இறைவன் புலப்படவில்லை. அவர்கள் இகழ்ச்சியோடு, 'இதுவும் அல்ல, அதுவும் அல்ல' என்றார்கள்.

'நாஸ்திகன், நாஸ்திகன்!' என்று மக்கள் சினம் பொங்கக் கத்தினார்கள்.

## 3

### மரத்தின் வேர்

ஒரு மரத்தில் மலர்களின் மணம் எங்கும் பரவியிருந்தது.

வழிப்போக்கன் ஒவ்வொருவனும் அந்த மணத்தை நுகர்ந்துகொண்டு அங்கே கணப்பொழுதாவது நிற்காமல் போவதில்லை.

அந்த மரத்தில் கனிகள் குலுங்கின. அவற்றின் நறுமணத்தில் மயங்கி, நிறம் நிறமான பறவைகள் அந்த மரத்தைச் சுற்றிக் கூத்தாடின.

மலர்களும் கனிகளும் சொர்க்க இன்பத்தை எய்தின.

ஒரு நாள் காலையில் தோட்டக்காரன் அந்த மரத்தின் வேருக்கு நீர் பாய்ச்சினான்.

மலர்கள் அவனைப் பார்த்து, 'தோட்டக்காரா, உனக்குப் புத்தியே இல்லை! அங்கே மண்ணில் எதற்காகத் தண்ணீர்விடுகிறாய்? பீச்சாங்குழலினாலே எங்கள்மீது நீர்த்துளிகளை வீசு. முத்தைப் போல அவை ஒளி வீசும்' என்றான்.

பழங்களும் அப்படியே பிடிவாதம் பிடித்தன. 'கோணல்மாணலான, நிறமும் அழகும் இல்லாத, எப்பொழுதும் மண்ணிலே புரளுகிற அந்த வேர்களுக்கு எதற்காக நீரினால் அபிஷேகம் செய்ய வேண்டும்?' என்று அவை நினைத்தன.

தோட்டக்காரன் மலர்களுக்கும் கனிகளுக்கும் நீரைத் தெளித்தான்.

தண்ணீர் கிடைத்துங்கூட மலர்கள் வாடின; கனிகள் அழுகின.

அவை கடைசியில் தோட்டக்காரனுடைய காலில் விழுந்து, 'தோட்டக்காரத் தாத்தா, மண்ணில் இருக்கும் அந்த வேர்களுக்கே முதலில் நீர் பாய்ச்சுங்கள். அவை பிழைத்தால்தான் நாங்கள் உயிர் வாழ்வோம்' என்று கெஞ்சின.

## 4

### பெண்ணின் உள்ளம்

அவள் கண்களில் நீர் வடிந்தது.

'ஏன் அழுகிறாய்?' என்று யாரோ கேட்டார்கள்.

அவள் அழுதுகொண்டே, 'என் புதியபாவாடை கிழிந்துவிட்டது. இனிமேல் தைத்தாலுங்கூட அது விகாரமாகத்தான் இருக்கும்' என்றாள்.

இதற்குப் பிறகு பத்து ஆண்டுகள் கடந்தன.

அவள் கண்களில் நீர் துளும்பியது. 'ஏன் அழுகிறாய்?' என்று யாரோ கேட்டார்கள்.

அவள் அழுதுகொண்டே, 'என் கை வெந்து விட்டது. புடைவை எரிந்து போனதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. ஆனால் என் கை— இனி அது வாழ்நாள் முழுவதும் விகாரமாக இருக்குமே!' என்றாள்.

இதற்குப் பிறகு பத்து ஆண்டுகள் கடந்தன.

அவள் கண்களில் நீர் வடிந்தது. 'ஏன் அழுகிறாய்?' என்று யாரோ கேட்டார்கள்.

அவள் அழுதுகொண்டே, 'என் குழந்தை-' என்றாள்.

அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. அவள் விக்கி விக்கி மெதுவாக அழுகையை அடக்கிக்கொண்டே, 'எனக்குத் துணிமணிகள் வேண்டாம், நகை நட்டுகள் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். என் குழந்தை பிழைத்திருந்தால் போதும். ஆண்டவனே, என் ஆயுசை எடுத்துக்கொண்டு என் குழந்தைக்குத் தீர்க்காயுசைக் கொடு!' என்றாள்.

## 5

### வழிபாடு

'நாம் எப்பொழுதும் இந்தக் கல்லை எதற்காக வழிபட வேண்டும்?' என்று மலர்கள் ஒரு தடவை நினைத்தன.

அவை கோபத்தோடு உட்கார்ந்துவிட்டன.

அப்பொழுது இயற்கை அவர்களைப் பார்த்து, 'நீங்கள் கல்லை வழிபடாவிட்டால் கல் உங்களை வழி

படும். வழிபாடு இல்லாமல் இந்த உலகம் நடக்காது' என்றது.

மலர்கள் இதை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டன.

ஒவ்வொரு கல்லாக மென்மையான மலர்மேல் விழலாயிற்று. மலர்கள் நசுங்கிப் போயின.

பிறகு மலர்கள் யாவும் இயற்கையைப் பார்த்து, 'எங்களுக்கு வேண்டாம் இந்த மரியாதை! வழிபாட்டை ஏற்றுக்கொள்வதைவிட அதைச் செய்வதில்தான் இன்பம் இருக்கிறது' என்றன.



